# பாலசந்தரின் கல்கி

• ஸ்ருதி

முழங்காலுக்கு மேல் வேஷ்டியை மடித்துக் கட்டி, பரபரப்பாக நாற்காலிகளை ஓரமாகத் தள்ளிப் போடுவதும் டேபிளை சுத்தம் பண்ணுவதுமாக இருந்தார் பாலசந்தர். 'டூயட்'டுக்குப் பிறகு ஏற்பட்ட நீண்ட சினிமா இடைவெளிக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டு



உற்சாகமாக அடுத்தப் படம் ஆரம்பித்திருக்கிறார். டைட்டில் — கல்கி! (முதல் வரி பரபரப்பு — படம் சம்பந்தப்பட்டதல்ல. தம் பிரத்யேக அறையில் புதிதாக ஒரு 'சோனி' டெலிவிஷன் கொண்டு வந்து வைப்பதற்காக!) சன் டீவி 'கையளவு மனசு' கண்டபடிக்கு 'ஹிட்' ஆகி விட, அடுத்த 'காதல் பகடை' பணிகளின் தீவிரம் ஒருபுறம் இருக்க, 'ஏன் தொடர்ந்து சினிமா எடுக்கவில்லை' என்று பார்க்கிறவர்களெல்லாம் கேட்கிறபடியால் —

இந்தப் பக்கத்தை நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கிற நிமிஷம் 'கல்கி' ஷூட்டிங் தொடங்கி விட்டிருப்பார்.

அதென்ன நம்ம டைட்டில்?

"இந்தப் படத்தின் கதாநாயகிக்கு 'கல்கி' என்று பெயர் சூட்டி இருக்கிறேன். கதைப்படி அவள் ஒரு டான்ஸர். ஆனால் மென்மையும் தீவிரமும் உணர்ச்சிப் பிரவாகமும் முற்போக்கு சிந்தனைகளும் கொப்பளிக்கிற கேரக்டர் அது! பொருத்தமான பெயர்தானே?"

அப்படியொரு கேரக்டருக்கு உருவம் கொடுக்கிற பெண்ணைத் தேடி ரொம்பவே அலைந்திருக்கிறார் கே.பி.

"என்னைப் பொறுத்தவரை அந்தப் பாத்திரத்துக்கு சரிதா வெகு பொருத்தம். பதினைந்து வருஷங்களுக்கு முந்தைய சரிதா. இப்போது அது சாத்தியமில்லை இல்லையா? அதான், பெங்களூரிலிருந்து 'ஸ்ருதி'யைக் கூட்டி வந்திருக்கிறேன்!" என்றார்.

தமிழ் பேசத் தெரிந்த, கன்னடப் படங்களில் நடிக்கிற, தெலுங்குப் பெண் ஸ்ருதி. (சே! என்ன ஒரு தேசிய ஒருமைப்பாடு!)

கே.பி.யின் வழக்கப்படி இல்லாமல் இந்தப் படத்தில் இரண்டு மெகா மாறுதல் கள். இசை ரகுமான் இல்லை; தேவா. பாடல்கள் வைரமுத்து இல்லை; இளந்தேவன்!

"இளந்தேவனை மேடைக் கவியரங்குகளில் நீங்கள் பார்த்திருக்கலாம். அமர்க்களமான சொல்லாட்சிக்கு சொந்தக்காரர். 'கையளவு மனசு' சீரியலில் க்ளைமாக்ஸ் பாடல் ('ஒவ்வொரு முடிவிலும் ஒருவொரு ஆரம்பம் ஒளிந்தே இருக்கிறது') எழுதியவர். மிகுந்த திறமைசாலி. இந்தப் படத்தின் மொத்தப் பாடல்களும் அவரே எழுதியிருக்கிறார்" என்றார் கே.பி. (ரெக்கார்டிங் எல்லாம் முடிந்து விட்டது.)

"முப்பது வருஷ சினிமாக்காரன் என்றாலும் இந்த இரண்டு வருஷ டீவி அனுபவம் வெகு சுகமாகத்தான் இருக்கிறது. First bench ஆடியன்ஸ் பற்றிய கவலை இல்லாத சுகம். ஆனால் யார் விட்டார்கள்? பிடித்து, மறுபடி சினிமாவுக்கு இழுத்துக் கொண்டு வந்து விட்டார்கள்!" என்றார், ஜலதோஷச் சிரிப்புடன். ("அலைச்சல். வெயில். ஏஸி. மறுபடி அலைச்சல். வெயில். ஏஸி. அதான் ஒத்துக் கலை.")

'ஆசை' பிரகாஷ்ராஜ் தவிர கே.பி.யின் ஆஸ்தான கீதாவுக்கும் படத்தில் முக்கிய ரோல் என்று சொன்னார். கொசுறாகச் சொன்னது - டூயட் போல மசாலா விஷப் பரீட்சைகள் இந்தப் படத்தில் இல்லை என்பது.

"ஒரு சின்ன குடும்பத்தைச் சுற்றிப் பின்னப்பட்ட உணர்ச்சிமயமான கதை. தீபாவளி ரிலீஸ், நிச்சயம்!" என்றார்.

**- ஔரங்கசீப்**

---

**"தலைவர் அதோ அந்தக் கட்டடத்தில் 'லிப்ட்' வைக்கிறதாகச் சொல்லி ஊழல் பண்ணியிருக்கிறார்!"**

**"என்ன ஆதாரம்?"**

**"அந்தக் கட்டடத்துக்கு மாடியே கிடையாதே!"**

**- பி. வி. சீனிவாசன்**





**"எனக்கா தாயி சோறு இல்லன்னு சொல்றே? ஒரு காலத்துலே நான் எப்படி இருந்தேன் தெரியுமா? குளிப்பாட்ட ஆளு. சோறு ஊட்டிட ஆளு. பாய் விரிச்சுப் போட்டு தூங்க வைக்க ஆளுன்னு. ராஜா போல இருந்தேன். இன்னைக்கு..."**

**"அடப் பாவமே! ஏம்பா இப்படி இன்னைக்கு ஆயிட்டே?"**

**"என்ன தாயீ பண்றது? என்னைக்கும் குழந்தையாவே இருக்க முடியுங்களா?"**

**- ஆர். மாணிக்கவேல்**

**"நீங்க ஏன் உங்க 7-வது கணவரை மட்டும் டைவர்ஸ் பண்ணாமலே இருக்கீங்க?"**

**"டைவர்ஸ் பண்ணிப் பண்ணி எனக்கு வெறுத்தே போச்சுங்க!"**

**- சீர்காழி. வி. ரேவதி**



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — 1996



**முதல் பரிசு ரூ. 1,500**

**இரண்டாவது பரிசு ரூ. 1,000**

**மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 500 வீதம்) ரூ. 1,000**

**ஆக மொத்தம் ரூ. 3,500 பரிசுகளாக வழங்கப் பெறும்.**

தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 150 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்கு போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதி மொழி தரவேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி : ஜூன் 15.**

- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய அளவு தபால் தலை ஒட்டிய, சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 4 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

**ஆசிரியர், கல்கி,**
**47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை — 600 097.**


என் ஃப்ரண்ட், மாலதி ஃபோன் பண்ணினா நான் ஃபர்ஸ்ட் க்ளாஸ்ல போறதை மறக்காமச் சொல்லுங்க!
வாங்கினது ஒரு வடை! சாம்பார் நாலு தடவையா!
உங்க ஜாதகத்தைப் பார்த்தேன். அதிர்ஷ்டம் பின்னால வந்து உங்களை மோதப் போகுது!
ஆன்ட்டீ! நீங்க இந்த ஐஸ்கிரீம் கோன் டைப்ல 'ஹிப்' ஷேப்ல இருக்கீங்க!
ஐஸ்கிரீம் கேட்டதுக்கு ஏன் எல்லார்கிட்டயும் இப்படி 'சூடா' பேசறீங்க?
கல்கி டிசம்பர் ஸ்பெஷல்!

# வாழ்வில் முடிவெடுத்த அந்தத் தருணம் என்றும் பசுமையானது...



## அதற்கு ஈடான மற்றொரு தருணம் நீங்கள் யெஸ்டி அஸோஸியேடட் பில்டர்ஸிடம் இல்லம் வாங்கும் இனிய தருணம்தான்!

அண்ணா நகர், தி. நகர், நங்கநல்லூர், வேளச்சேரி
மற்றும் பிற இடங்களில் அழகிய தரமான
டீலக்ஸ் ஃபிளாட்டுகள் மற்றும்
தனி வீடுகள் வாங்க

அணுகுங்கள்




**YESDE ASSOCIATED BUILDERS LTD.**
FLAT PROMOTERS & PROPERTY DEVELOPERS
26, Ranganathan Street, IInd Floor, T. Nagar, Madras - 600 017.
Phone : 4340224/4340210/4342667. Fax : 044-2344333

HITECH 9604

# சுஜாதா பக்கம்



"ஆங்கில இலக்கியத்தின் தலைசிறந்த நாடகாசிரியரான ஷேக்ஸ்பியரைப் பற்றி ஏராள மான ஆராய்ச்சிகள் உள்ளன. அவர் சொந்த வாழ்க்கை பற்றி அதிகம் தெரியவில்லை. பிறந்தது ஏப்ரல் 23, 1564. இறந்தது அதே தேதி 1616. 1590லிருந்து 1613 வரை அவர் எழுதிய நாடகங்கள் இன்றுவரை உலகின் ஏதாவது ஒரு பகுதியில் தொடர்ந்து நடிக்கப்படுகின்றன. சமகால எழுத் தாளரான பென் ஜான்சன் சொன்னபடி "அவர் நம் காலத்தவரல்ல; எல்லாக் காலத்துக்கும் உரிய வர்."

ஷேக்ஸ்பியர் தம் நாடகங்களில் மொத்தம் 29138 மூலவார்த்தைகளைப் பயன்படுத்தியிருக் கிறார். அவர்கால ஆங்கில மொழியில் நாற்பது சதவிகிதம் அது. (ஷேக்ஸ்பியர் காலத்தில் அகராதி இல்லை) ஒப்பிட்டுப் பார்த்தால் மகாகவி மில்டன் பயன்படுத்தியது பத்தாயிரம் வார்த்தைகளை மட்டுமே. கிங் ஜேம்ஸ் பைபிள் எட்டாயிரம். ஹோமர் ஒன்பதாயிரம். உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கலாம். இன்று புழக்கத்தில் இருந்துவரும் ASSASSINATION, ACCOMODATION, BASELESS, BEDROOM, CRITIC, DISHEARTEN, EXPOSURE, OBSCENE, PEDANT, SPORTIVE, USELESS, LEAP-FROG போன்ற வார்த்தைகள் ஷேக்ஸ்பியர் முதன் முதலில் பயன் படுத்தியவை.

தமிழிலும் நம் பழைய இலக்கியங்களில் பல நல்ல நல்ல வார்த்தைகள் உள்ளன. இதில் சோகம், அவற்றைப் பயன்படுத்துவதை மெள்ள மெள்ள குறைத்துக் கொண் ருக்கிறோம். தற்காலத்தில் பேசப்படும், எழுதப்படும் தமிழ் மொத்தம் ஆயிரம் அல்லது மிஞ்சிப் போனால் ஐயாயிரம் சொற் களுக்குள் அடங்கி விடுகிறது. நாம் இழந்த சில சொற்களைப் பார்க்கலாம்:-

'இலை' என்னும் ஒரே உறுப்புக்குத் தமிழில், நான்கு சொற்கள் உள்ளன. மா, வாழை போன்ற வற்றிற்கு இலை. நெல், கேழ்வரகு போன்றவற்றிற்கு 'தாள்'. கரும்பு, சோளம் இவைகளுக்குத் 'தோகை'. தென்னை, பனைக்கு 'ஓலை'. இதில் தோகை மறைந்துவிட்டது. அதுபோல் ஒரு பூவிற்கு அதன் பல்வேறு நிலைகளில் அரும்பு, போது, மலர், வீ, செம்மல் என்று வார்த்தைகள் உள்ளன. இதில் பூ, அரும்பு, மலர், தவிர மற்றவை வழக்கில் இல்லை. அரும்பிலேயே மொட்டு, முகிழ், முகை, மொக்குள் என வேறு வேறு சொற்களுள் மொட்டு மட்டும் தான் உள்ளது. காயின் நிலைகளில் பூம்பிஞ்சு, திருகுபிஞ்சு கன்னற்காய் இவை மறைந்து விட்டன. மாம்பிஞ்சுக்கு மாவடு இருக்கிறது. பலாப்பிஞ்சுக்கு உண்டான 'மூசு' எங்கே போச்சு தெரியவில்லை. நெல் வகைக்கு மட்டுமே நூறு வார்த்தைகள் இருப்பதாகச் சொல்கிறார்கள். இதில் சம்பா ஒரு வகைக்கே எழுபது உண்டாம். அவையெல்லாம் எங்கே?

நிஜத்திற்கு உண்மை, வாய்மை, மெய்மை என்று மூன்று தமிழ்ச் சொற்கள் உள்ளன. இவற் றின் வேறுபாட்டை உணர்ந்து நாம் பயன்படுத்துகிறோமா என்பது சந்தேகமே. உண்மை என்பது மனத்துக்குள் இருப்பது. வாய்மை என்பது சொல்லில். மெய்மை செயலில். "தமிழின் சொல்வளத்தை தமிழரே இன்னும் சரியாக உணர்ந்திலர்" என்று தேவநேயப் பாவாணர் எழுதியிருப்பது சரியே.

ஒரு பக்கத்தில் நல்ல நல்ல தமிழ்ச் சொற்களை இழந்து கொண்டிருக்க, மறுபக்கத்தில் புதிய கலைச் சொற்களை அமைக்கத் திணறிக் கொண்டிருக் கிறோம். இயற்பியல், மருத்துவம், வேதியியல் ஜெனட்டிக்ஸ், உயிரியல், கணிப்பொறியியல் போன்றவற்றை மேல்நிலையில் தமிழில் கற்றுத் தர கலைச் சொற்கள் மிக அவசரமாகத் தேவைப்படு கின்றன. இதற்காக நாம் புதிய தமிழ் வார்த்தைகள் அமைக்க வேண்டியதே இல்லை என்பதுதான் என் வாதம். இருக்கிற தமிழ்ச் சொற்களையே பொருத் தம் பற்றி அதிகம் கவலைப்படாமல் புதிய அர்த் தங்களில் பயன்படுத்த அறிவியலும் தமிழும் தெரிந்த சில அறிஞர்கள் தேவைப்படுகிறார்கள்.

இவ்வகையினர் பலரை நான் சந்தித்திருக் கிறேன். இவர்களையெல்லாம் ஒருங்கிணைத்து ஒரு 'கலைச் சொல் வாரியம்' அமைக்க வேண்டும். ஃப்ரெஞ்சு, ஜப்பானிய மொழியினர் செய்தார்கள். அதுபோல் செய்ய வேண்டும். தேர்தல் முடிந்து புதிய அரசு இதை முதல் காரியமாகச் செய்ய வேண்டும்.

தமிழில் அகம் புறம் மலையாளத்துக்குச் சென்று விட்டது. மனை கன்னடத்துக்கு. இல்லு, ஈ தெலுங்குக்குப் பறந்து போய் விட்டது. தா, கொடு இரண்டும் தமிழில் அதிக வேறுபாடின்றி பயன்படுத்தப்படுகின்றன. முன்பு 'ஈ' என்பது நம்மை விடக் கீழ் நிலையில் உள்ளவருக்கும் 'தா' என்பது நம்முடன் ஒத்தவர்க்கும் 'கொடு' என்பது நம்மைவிட உயர்ந்தவர்களுக்குக் கொடுப்பதற்கும் பயன்பட்டு வந்தது. சமூகத் தராதரம் மறைந்ததில் இந்த நளினமான வேறுபாடுகளும் மெள்ள மறைந்து விட்டதில் வியப்பில்லை.

இன்றைய தினங்களில் இம்மூன்று வார்த் தைகளையும் வேறு சூழ்நிலையில் கலைச் சொற்களில் பயன்படுத்தும் வாய்ப்பு உள்ளது. குறிப்பாக சட்டப் புத்தகங்களில்.

உதாரணமாக GRANT, ENDOWMENT, GIFT இவைகளுக்குள் வேறுபடுத்தப் பயன்படுத்தலாம்.

(மீண்டும் அடுத்த வாரம்)

## 19. மல்லரின் மென்மனம்

நியாயம் என்பது மனிதனுக்கு மனிதன் வேறுபடுவது. ஆனால் தர்மம் என்பது அனைத்து உயிர்களுக்கும் பொதுவானது. தர்மம் என்பது மாறாதது, அழியாதது. உலகின் இயக்கத்தை, சூரிய சந்திரர்களின், விண்மீன்களின் இயக்கத்தை, இயற்கையின் செயல்களை நடத்திச் செல்வது. அரசு நடத்தவும், மக்களைக் காக்கவும், போர்களை நடத்தவும் கூட ஒரு தர்மம் இருக்கிறது. அத்தகைய யுத்த தர்மத்தை என்றும் மதிப்பவனும், யுத்தம் என்று வரும்போது எதிரியின் வீரத்தை மதிப்பவனும், எதிராளியை அவன் விரும்பும் வசதிகளின்படி போரிட விட்டு அவனை வெல்வதே வீரம் என்று எண்ணுபவனுமான ஜடாவர்ம சுந்தர பாண்டியன், போசள தண்டநாயகனை பின்வாங்கவும், கோட்டைக்குள் பாதுகாப்புடன் நுழையவும் தாராளமாக அனுமதித்ததில் வியப்பேதுமில்லை.

பாண்டிய மன்னன் மட்டும் விரும்பியிருந்தால் கோட்டைக்குள் நுழையுமுன்பே எளிதாகத் தன்னை அழித்திருக்கலாமென்பதை உணர்ந்திருந்தான் விக்கலன். கிருஷ்ணமல்லரின் அசுர வேகத்திற்கும் அவரது சீடர்களான அந்த ராட்சதர்களின் வேகத்திற்கும் தானும் தனது போசள வீரர்களும் ஈடுகொடுத்திருக்க இயலாது என்பதைத் தெளிவாகப் புரிந்து கொண்டிருந்ததால் சற்று வியப்புடனேயே கோட்டை மதிலின் மீது நின்று பாண்டியர் படையின் அடுத்த ஏற்பாடுகளைக் கவனிக்க ஆரம்பித்தான்.

ஸ்காந்தபுரக் கோட்டையின் எதிரில் அம்பெறியும் தூரத்திலேயே வெகு அலட்சியமாக உலவிய கிருஷ்ணமல்லரின் முரட்டு அரபுப் புரவி, அணிவகுத்து நின்ற பாண்டிய வீரர்களுக்கு முன்னால் குறுக்கும் நெடுக்குமாக உலவியது. அத்தனை அருகில் எதிரிகளின் கோட்டையிருப்பதை அறவே சட்டை செய்யாத கிருஷ்ணமல்லரின் வெண்கலக் குரல், சரமாரியாக உத்தரவுகளைப் பிறப்பித்துக் கொண்டிருந்தது. கோட்டையைத் தாக்கும் பொறுப்பை கிருஷ்ணமல்லரிடம் ஒப்படைத்து விட்ட பாண்டிய மன்னன், சற்றுத் தள்ளி தமது புரவியிலமர்ந்து படைத்தலைவரிடும் உத்தரவுகளைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

பாண்டியர் படையின் ஒரு பிரிவு சடசடவென்று புரவிகளைத் திருப்பிக் கொண்டு மீண்டும் நதிக்கரையை நோக்கி அதிவேகமாக விரைந்தது. இரு நாழிகைகள் கழிந்து அந்த வீரர்கள் திரும்பியபோது கிருஷ்ணமல்லரின் உத்தேசத்தைப் புரிந்து கொண்ட விக்கலன் திகைத்தான். கனமான மரங்கள் வரிசையாக நதிக்கரையிலிருந்து வந்தன. கிருஷ்ணமல்லரின் சீடர்கள் ஐவர் ஐவராக மரங்களைத் தோள்களில் தாங்கி, மறுகரங்களில் தலைக்கு மேல் உயர்த்திப் பிடித்த சதுர கேடயங்களுடன் கோட்டை வாயிலை நோக்கி வேகத்துடன் முன்னேற, வில் வீரர்கள், கோட்டையின் உச்சியை நோக்கிக் குறிவைத்தனர். மதில் உச்சியில் போசள வீரர்களின் தலைகள் தெரிந்ததும் அம்புகள் பறந்தன. மரங்கள் பெரும் இடிகளாக வாயிலில் ஒன்றன்பின் ஒன்றாக மோதத் தொடங்கின. களிறுகள் இல்லாத குறையை ஈடுசெய்த மல்லர்களின் தொடர்ச்சியான தாக்குதலில் இரு நாழிகளுக்கும் சற்று அதிக நேரம் வரையில் ஈடுகொடுத்த

> அள்ளித் தூக்கிக் கொண்டு வரப்படாத குறையாக சற்றுக் கழித்து உள்ளே கொண்டு வரப்பட்ட மருத்துவரை உஷ்ணம் தெறிக்க நோக்கிய கிருஷ்ணமல்லர், "இன்னும் இவன் ஏன் கண் விழிக்கவில்லை?" என்றார் முரட்டுத்தனமாக.



தெற்கு வாசல் கதவுகள், பெரும் ஒலியுடன் உட்புறமாக முறிந்து விழுந்தன.

கதவுகள் விழுந்ததும் பாண்டியர் புரவிப் படை வேகமாக உள்ளே நுழைந்துவிடும் என்று எதிர் பார்த்திருந்த விக்கலன் ஏமாந்தே போனான். இருஷ்ணமல்லரின் குரல் அதே வெண்கலத் தொனியில் மீண்டும் ஏதோ உத்தரவிட்டுக் கொண்டிருந்தது. சற்றுக் கழித்து அவரது சேடர்கள் வாட்களையும் அந்தக் கேடயங்களையும் ஏந்தி புரவிகளில் தாவினர். இரு உட்புற மதில்களுக்கிடையே நெருக்கமாக அணிவகுத்த மல்லர்கள் தலைக்கு மேல் உயர்த்திய கேடயங்கள் உலோகக் கூரையிட் டது போல் இணைத்திருக்க, உள்ளே பாய்ந்தனர். விக்கலன், தன் உத்தரவின்படி மேலிருந்து அம்புகளைப் பொழிந்த யந்திரங் கள் பயனற்று விட்டதையும், மல்லர்கள்

விஷ்வக்சேனன்

இரண்டாவது கற்று வாயிலை அடைந்து விட்டதையும் கண்டான்.

ஒரு பிரிவை மேலிருந்து யந்திரங்கள் இயக்கிய வீரர்களைத் தாக்க கிருஷ்ணமல்லர் உத்தரவிட்டு, எதிரில் நின்ற யவனப் பொறிகளைத் தாக்கத் துவங்கி விட்டதையும் பார்த்தான். இந்த அசுரப் படையை எதிர்கொள்ள இனி போசள நாடே கவசம் பூண்டு வந்தாலும் இயலாது என்பதைப் புரிந்து கொண்டான்.

யவனப் பொறிகளின் அடிப்பகுதியிலிருந்த பெரும் மர உருளைகளைச் சரமாரியாக வேல்களை எறிந்து பிளந்த கிருஷ்ணமல்லர், அடுத்து செய்த சமிக்ஞையைத் தொடர்ந்து, பாண்டிய மன்னனின் புரவிப் படையை முழு வேகத்துடன் கோட்டைக்குள் புகுந்தது.

மதிலை விட்டிறங்கி, தமது புரவியில் ஆரோகணித்த விக்கலன், மாளிகையை நோக்கி விரைந்த கிருஷ்ணமல்லரைத் தடுத்து நேருக்கு நேர் மோதினாலும், அவன் வாள் வீச்சில் வேகம் சற்றுக் குறைந்தே இருந்தது. கிருஷ்ணமல்லர் சலித்துக் கொண்டார். "என்ன வீச்சு இது விக்கலா? பலமாக வீசு உன் வாளை" என்று இரையவும் செய்தார். மடிவதானாலும் இந்த மனிதரின் கரத்தால் மடிவது தனக்குப் பெருமை என்று தீர்மானித்த விக்கலன் இடிகள் போலிறங்கிய படைத் தலைவரின் வாளை உறுதியுடன் எதிர்க்க ஆரம்பித்தான்.

அதுவரை எவரும் தடுத்தறியாத தமது பெரும் வாளை விக்கலன் வெகு லாகவமாகத் தடுத்துத் திருப்பியதையும், தமது தோளிலும் கூட ஒருமுறை அவன் வாள் பதிந்து மீண்டதையும் கண்ட கிருஷ்ணமல்லருக்கு மெள்ள அந்தப் போரில் சுவாரசியம் பிறக்கத் தொடங்கியது.

சுதந்தரமென்பதைச் சிறிது இடைவெளிக்குப் பின் மீண்டும் அடையும்போது மன்னனும் சரி, மக்களும் சரி, அது புதிதாகக் கிடைப்பதாகவே மகிழ்கிறார்கள் என்பதை கொங்கு நாட்டு மன்னனும், அரண்மனைக்குள் உலவிய மற்றவர்களும் நிரூபித்துக் கொண்டிருந்தார்கள்.

ஸ்காந்தபுரத்து அரண்மனையில் உலவிய அனைவரது முகங்களிலும் ஆனந்தம் தாண்டவமாடியது. மன்னன் அவநிதனை அதுவரை வருத்திய நோய், போன இடம் தெரியவில்லை! எங்கிருந்தோ வந்து குதித்திருந்த மருத்துவர் தமது முதுமையை அறவே மறந்து மேலும் கீழுமாக ஓடிக் கொண்டிருக்க, பாண்டிய மன்னனை அணுகி ஏதோ கூற முயன்ற அவநிதனின் குரல் எழும்பாமல் தழுதழுத்துக் கிடந்தது.

ஆனால் இந்தச் சூழ்நிலைக்கு நேர் மாறாக அரண்மனை மேன்மாடத்தின் கடைசி அறையில் அமர்ந்திருந்த கிருஷ்ணமல்லரின் முகத்தில் மட்டும் பெரும் கவலை படர்ந்து கிடந்தது. அவரது சிறிய யானை விழிகள் – எதிரில் பஞ்சணையில் – பெரும்கட்டுக்களுடன் நினைவின்றிப் படுத்துக் கிடந்த விக்கலன் மீது பதிந்து கிடந்தன. கிருஷ்ணமல்லரின் பெரும் வாள் அவன் கவசத்தை உடைத்துக் கொண்டு விலாப்பகுதியில் மூன்று விரற்கடை தூரம் பாய்ந்து, விலாவின் கடைசி வரிசை எலும்புகளை முறித்திருந்தது. இத்தனைக்கும் அவன் வாள் வீச்சை ரசித்தபடியே வாளை விலக்கிப் பாய்ச்சியபோது, அவர் தமது வேகத்தைப் பெரிதும் குறைத்துக் கொண்டுதான் வீசியிருந்தார்.

துவங்கிய அன்று மாலையே போர் முடிந்து விட்டாலும், அடுத்த நாளின் உதயகாலம் வரை திறக்காமலிருந்த விக்கலனின் மூடிய விழிகளையும், அசைவற்ற தேகத்தையும் கண்டவர், "என்ன மருத்துவன் இந்த கொங்கு நாட்டு மருத்துவன்!" என்று சலித்தபடியே ஏழாவது முறையாக வாயிலில் நின்ற தமது சீடனை அழைத்தார். "அடேய் உப்பிலி! சென்று அந்த மருத்துவனை இழுத்து வா!" என்று உத்தரவும் இட்டார்.

அள்ளித் தூக்கிக் கொண்டு வரப்படாத குறையாக சற்றுக் கழித்து உள்ளே கொண்டு வரப்பட்ட மருத்துவரை உஷ்ணம் தெறிக்க நோக்கிய கிருஷ்ணமல்லர், "இன்னும் இவன் ஏன் கண் விழிக்கவில்லை?" என்றார் முரட்டுத்தனமாக. விக்கலன் கண் திறவாமல் கிடப்பதற்கு ஏதோ தான்தான் காரணம் என்ற தொனியில் எழுந்த அந்தக் கேள்வியைக் கண்டு சற்று திருதிருவென விழித்த மருத்துவர், "படைத் தலைவரே, சற்றுப் பொறுத்துக் கொள்ளுங்கள். இன்று மாலைக்குள் இவர் விழித்து விடுவார். உயிருக்கு ஒன்றும் அபாயமில்லை. தாங்கள் இவரைச் சற்று பலமாகத் தான் தாக்கியிருக்கிறீர்கள்" என்றார்.

அடுத்தகணம் கிருஷ்ணமல்லர் எழுந்த வேகம், அப்படியே மருத்துவரை அறைந்தே கொன்று விடுவார் போலிருந்தது. "மருத்துவரே! நான் விக்கலனைத் தாக்கும்போது கால் பங்காக வேகத்தைக் குறைத்துத்தான் வாளை வீசினேன். நீர் இங்கேயே இரும்;

"சோமுவுக்கு வந்த அதிர்ஷ்டத்தைப் பார்த்தியா? கின்னஸ் புத்தகத்தில் அவன் பேர் வந்திருக்கு!"

"எதுக்காக?"

"தேர்தலிலே மிக அதிக வோட்டு வித்தியாசத்திலே தோற்றதற்கு!"

– து. பூவராகன்






# திரு.வி.க. நகர் பெனிஃபிட் ஃபண்ட் லிமிடெட்

ஸ்தாபிதம் 1989

தலைமை அலுவலகம் : 10, 2வது தெரு, ஆண்டாள் அவின்யு, (திரு.வி.க. நகர் பஸ் நிலையம் அருகில்), சென்னை - 600 082. போன் : 5378690

பாரீஸ் கிளை : 8/2, ஸ்டரிங்கர்ஸ் தெரு, சென்னை - 600 108. போன் : 565760

தி. நகர் கிளை : 20, ரங்கநாதன் தெரு, சென்னை - 600 017. போன் : 4344324

அண்ணா நகர் கிளை : AC-38, 4வது தெரு, KHM ஆஸ்பத்திரி பின்புறம், அண்ணா நகர், சென்னை-40.



பாதுகாப்பான முறையில் சேமித்து வளருங்கள்

## திருமூர்த்தி பாண்டு

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ: 20,000 | 5 ஆண்டு | ரூ. 60,000 |

## வசந்தம் பாண்டு

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 7,000 | 40 மாதம் | ரூ. 14,000 |

## பென்ஷனர் வைப்பு நிதி

| முதலீடு | காலம் | வட்டி |
|---|---|---|
| ரூ. 10,000 | 1 ஆண்டு<br>2 ஆண்டு<br>3 ஆண்டு | 21% |

★ பென்ஷனர், ஓய்வு பெற்றோர், முதியோர் (50 வயதிற்கு மேல்), விதவைகள், ஊனமுற்றோர் இத்திட்டத்தின் கீழ் பயன்பெறலாம்.
★ பிரதி மாதம் 25ஆம் தேதி வட்டி வழங்கப்படும்.

## பென்ஷனர் மறுமுதலீட்டு திட்டம்

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 5,000 | 1 ஆண்டு<br>2 ஆண்டு<br>3 ஆண்டு<br>40 மாதம் | 6,157<br>7,582<br>9,337<br>10,000 |

## எக்செல் பாண்டு - A திட்டம்

| முதலீடு | காலம் | வட்டி |
|---|---|---|
| ரூ. 9,000 | 2 ஆண்டு | 21% |

பிரதி மாதம் 25ஆம் தேதி வட்டி வழங்கப்படும்

## எக்செல் பாண்டு - B திட்டம்

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 9,000 | 2 ஆண்டு | ரூ. 13,648 |

## வைப்பு நிதி

| முதலீடு | காலம் | வட்டி |
|---|---|---|
| ரூ. 5,000 | 1 ஆண்டு<br>2 ஆண்டு<br>3 ஆண்டு<br>4 ஆண்டு | 18%<br>19%<br>20%<br>21% |

பிரதி மாதம் 25ஆம் தேதி வட்டி வழங்கப்படும்

## மறுமுதலீட்டு திட்டம்

| முதலீடு | காலம் | முதிர்வு தொகை |
|---|---|---|
| ரூ. 1,000 | 12 மாதம்<br>24 மாதம்<br>36 மாதம்<br>42 மாதம் | 1,195<br>1,455<br>1,810<br>2,000 |

★ சேமிப்பு திட்டம் 12% வட்டி நாள் கணக்கில் வட்டி கணக்கிடப்படும்.
★ தங்க நகைகள் பேரில் ஒரு சவரனுக்கு ரூ. 2400 வரை கடன் வழங்கப்படும். மாத வட்டி 2%.
★ சென்னை மாநகர வீடு/ஃப்ளாட் பேரில் கடன் வழங்கப்படும். குறைந்த வட்டி. கடன் மிக விரைவாக வழங்கப்படும்.
★ பங்குதாரர்களுக்கு மட்டும்
★ ரூ.10 செலுத்தி பங்குதாரர் ஆவீர்.

## வேலை நேரம்

தலைமை அலுவலகம் : 9 முதல் 5. ஞாயிறு 9 முதல் 1
கிளைகள் : 10 முதல் 5. ஞாயிறு 10 முதல் 1
உணவு இடைவேளை இல்லை. செவ்வாய் விடுமுறை.

# நடராஜ் எஸ்டேட்ஸ்

வழங்கும்,

## ஈடு இணையற்ற லாபகர திட்டம்

# வாரம் தோறும் காய்கறிகள்

### இல்லத்தரசிகளே !

**உங்கள் வீடு தேடி வருகிறது எங்கள் பண்ணையில் விளையும் காய்கறிகள்**

*(சென்னை நகர வாசிகளுக்கு மட்டும்)*

Ariya Perumpakkam Village,
(Survey No : 444/1 to 461/3D)




- ரூ. 5,000 செலுத்தி 3 வருடங்களுக்கு "மெம்பர்" ஆக வேண்டும்.
- 3 வருடங்களுக்குப் பிறகு "ரூ. 5000-ஐ" திரும்ப பெற்றுக் கொள்ளலாம்.
- அல்லது மேலும் 3 வருடங்களுக்கு "ரினிவல்" செய்து கொள்ளலாம்.
- உங்கள் மெம்பர்ஷிப் கட்டணத்துக்கு 12% வட்டியும் உண்டு.
- சப்ளை செய்யப்படும் காய்கறிகளுக்காக நீங்கள் தனியே பணம் ஏதுவும் கொடுக்க வேண்டியதில்லை.
- மெம்பர் ஆன தேதியிலிருந்து வாரா வாரம் கணிசமான அளவு காய்கறிகள் தொடர்ந்து சப்ளை செய்யப்படும்.

**மெம்பர்ஷிப் கட்டணத்தை நேரிலோ, "செக்" மூலமாகவோ, டி.டி. ஆகவோ அளிக்கலாம்.**

**இலவசம்**
உறுப்பினர் கார்டு, மற்றும் காய்கறி நறுக்கும் S.S. கட்டர்.





**ஞாயிறு தோறும்**
பசுமை நிறைந்த காய்கறி பைகளுடன் எங்கள் பிரதிநிதி உங்கள் வீட்டுக்கதவை இன் முகத்துடன் தட்டுவார்.

பூச்சிக் கொல்லி மருந்து, மற்றும் ரசாயன உரங்களை 99% தவிர்க்க முயற்சி செய்கிறோம். இயற்கை உரம் இடுவதால் உங்கள் உடல் நலம் முற்றிலும் பாதுகாக்கப்படுகிறது.

### காய்கறி விபரம்

தக்காளி, வெண்டைக்காய், கத்தரிக்காய், வாழைக்காய், புடலங்காய், அவரைக்காய், பாகற்காய், பீர்க்கங்காய், சுண்டைக்காய், சுரைக்காய், பூசணிக்காய், பரங்கிக்காய், கொத்தவரங்காய், முருங்கைக்காய், முள்ளங்கி, எலுமிச்சம் பழம், இஞ்சி, கொத்துமல்லி, கறிவேப்பிலை, மற்றும் கீரை வகைகளும் மாற்றி மாற்றி சப்ளை செய்யப்படும்.

**Phone : 4342098, 4840150**

திட்டமிட்ட குடும்பத்துக்கு தேவையான காய்கறிகள் வழங்கப்படும். இயற்கை சீற்றங்களால் ஏதேனும் சேதாரம் ஏற்பட்டாலொழிய எங்கள் சப்ளை ஒருபோதும் நிற்காது.

**NATARAJ ESTATES**

"Shanthi Complex", 3rd Floor, 26, Ranganathan Street, T. Nagar, Madras - 600 017.
Branches : Tiruvarur, Thanjavur, Kancheepuram.



NATARAJ GROUP OF COMPANIES
Nataraj Finance & Investments,
Nataraj Chits (Tamilnadu) Pvt., ltd.,
Nataraj Exports Overseas, Nataraj Publications,
Nataraj Oil Mills, T.K. Geetha Agro Products.

**24% P.A.**



"என்ன சார், ஒரு மொட்டை போடு றதுக்கு நூறு ரூபாய் கேட்குறீங்களே?"

"ரஜினி ஸ்டைலிலே மொட்டை போடச் சொல்றீங்களே! அதுக்காகத்தான்!"

– மல்லிகை மன்னன்

மாலைக்குள் விக்கலன் விழிக்கவில்லையென்றால் உம்மை என் சீடர்களிடம் ஒப்படைத்துவிட்டு எமது அரண்மனை மருத்துவரை வரவழைத்துக் கொள்வேன்" என்றார் கிருஷ்ணமல்லர்.

வாயிலில் நின்ற சீடன், உதடுகளை விலக்கி சத்தமில்லாமல் மருத்துவரை நோக்கித் தன் பற்களைக் காட்டினான். மருத்துவரின் உடல் ஒருமுறை நடுங்கியது. "மதங்கொண்ட யானை மரத்தைக் குத்திச் சாய்ப்பது போல் சாய்த்துவிட்டு, இந்தக் கணமே எழுப்பி நிறுத்து என்றால் இயலுகிற காரியமா?" என்று முணுமுணுத்தபடியே விக்கலன் காயங்களை மீண்டும் பரிசோதித்தார் மருத்துவர்.

"என்ன புலம்புகிறீர்?" – கிருஷ்ணமல்லரின் குரல் மீண்டும் ஒலித்தது.

"ஒன்றுமில்லை படைத்தலைவரே, ரத்தம் வருவது நின்று பச்சிலையும் சற்று கெட்டிப்பட்டிருக்கிறது. வேறு மூலிகைகள் சிலவற்றையும் கொண்டு வருகிறேன்" என்று எழுந்தார் மருத்துவர்.

**மா**லைப் பொழுது நெருங்க நெருங்க விக்கலன் இன்னும் கண் விழிக்காததைக் கண்ட மருத்துவர் அந்த அறையை விட்டு வெளியேற வகை தெரியாது விழித்துக் கொண்டிருந்தார். அரண்மனையெங்கும் தீபங்களைப் பணியாட்கள் ஏற்றத் துவங்கிய சமயம்வரை பொறுத்திருந்த கிருஷ்ணமல்லர், தமது சீடனை அழைத்தார். "உப்பிலி, இந்த மருத்துவனை எடுத்து சாளரத்தின் வழியே வெளியில் எறிந்துவிடு. மதுரையிலிருந்து நமது மருத்துவர் நறையூருக்கு வந்திருப்பார். சென்று அவரை அழைத்து வா" என்று உத்தரவிட்டார்.

படைத் தலைவரின் உத்தரவு எத்தகையதானாலும் எப்பொழுதும் அதை மீறியறியாத உப்பிலி, மருத்துவரை நெருங்கி சிறு குழந்தையைத் தூக்குவது போல தலைக்கு மேல் தூக்கிக் கொண்டு, அவர் அலறலைப் பொருட்படுத்தாது சாளரத்தை நோக்கி நடந்தான்.

"படைத்தலைவரே!" என்ற மெலிதான குரல் பஞ்சணையிலிருந்து ஒலித்தது. விக்கலன் கண் விழித்திருந்தான். கிருஷ்ணமல்லரின் உக்கிரமான முகத்தையும், மருத்துவரைத் தூக்கியபடி நின்ற அவரது சீடனையும் கண்டவனின் முகத்தில் இலேசான முறுவல் ஒன்றும் படர்ந்தது.

**வி**க்கலனுக்கு நினைவு திரும்பிய இரண்டாவது தினம். அவன் மெள்ள எழுந்து அமரும் வரை மருத்துவரை வெளியில் செல்லவிடாத கிருஷ்ணமல்லர், மூன்றாவது தினம் மீண்டும் அவரை அழைத்தார். அந்த அழைப்பில் தெறித்த கடுமையைக் கண்ட மருத்துவர், "இப்பொழுதே விக்கலனை எழுந்து நடமாடச் செய்ய வேண்டும்" என உத்தரவிடுவார் என்று எதிர்பார்த்து நடுங்கியபடியே வந்து நின்றார்.

படைத்தலைவரின் விழிகள் உப்பிலி மல்லனை நோக்கித் திரும்பின. குறிப்பை உணர்ந்த சீடன் வெளியே சென்று திரும்பிய போது அவனே சிரமப்பட்டு சுமக்குமளவிற்கு ஒரு பெரும் பேழையைச் சுமந்து வந்து மருத்துவரின் எதிரில் வைத்தான். "அதைத் திறந்து பாரும்" – கிருஷ்ணமல்லரின் உத்தரவு மீண்டும் வந்தது.

மண்டியிட்டுப் பேழையைத் திறந்த மருத்துவரின் விழிகள் கூசின. முக்கால் பாகம் வரை நிறைந்து கிடந்த பொற்காசுகளின் மீது ரத்தினங்கள் பல இறைந்து கிடந்தன. "விக்கலன் உயிரை மீட்டதற்குப் பரிசு இது. எடுத்துக் கொண்டு நீர் வெளியேறலாம்" என்றார் கிருஷ்ணமல்லர். மண்டியிட்டபடியே திருதிருவென விழித்த மருத்துவரைக் கண்ட கிருஷ்ணமல்லரின் முகத்தில் சலிப்பு தோன்றியது. "என்ன மருத்துவரய்யா நீர்? உம்மால் எடுத்துச் சொல்ல இயலவில்லை என்றால் என் சீடனை விட்டு உம்மையும் சேர்த்து தூக்கிச் செல்ல உத்தரவிடவா?" என்றார் மீண்டும்.

அடுத்தகணம் பேழையை எடுத்துக் கொண்டு வெளியே பாய்ந்து மறைந்தார் மருத்துவர்.

சிறைப்பட்ட போசள வீரர்கள் சிலரை விடுவித்து, அவர்களுடைய பாதுகாப்புடன் விக்கலன் ரதமொன்றில் நாடு திரும்ப ஏற்பாடு செய்த கிருஷ்ணமல்லர், தமது படைகள் மீண்டும் அணிவகுத்து வடக்கு நோக்கிச் செல்ல, அன்று மாலையே உத்தரவிட்டார்.

**அ**தே சமயத்தில், பாண்டியரின் பரம வைரியும் போசளருக்கும், சோழருக்கும் அடங்காதவனென்று பெயரெடுத்திருந்தவனும், அரக்கர்களுக்கு நிகரானவர்களையே படை வீரர்களாகக் கொண்டிருந்தவனுமான காடவ மன்னன் கோப்பெருஞ்சிங்கனின் எல்லைக்குள் பிரவேசித்துக் கொண்டிருந்தான் ஆதித்ய பாண்டியன்.

(தொடரும்)



"உங்க முதலாளி நல்லவராப்பா?"

"சொக்கத் தங்கம் சார்."

"அப்ப இன்னொரு தோசை கொண்டு வா!"

- சீர்காழி வி. ரேவதி



"அவரோட ஞாபக மறதியைப் போய் இவ்வளவு பாராட்டுறியே, ஏன்?"

"பணம் கடன் வாங்கியது நான். அவர் வந்து கடனைத் திருப்பிக் கொடுத்திட்டுப் போறாரே!"

- பிரசன்னகுமார்



"கல்யாணம் பண்ணிக்கிட்டா ராதா வைத்தான் கல்யாணம் பண்ணிப்பேன்னு சொன்னே. இப்ப வேறு ஒரு பெண் ணைப் பண்ணிக்கிட்டு இருக்கியே?"

"ஹி... ஹி... இவ பெயரும் ராதாதான்!"

- வெ. ஜெயராமன்

# மதம் கடந்த ஆலயம்!

சென்னை பெரம்பூர் சுற்று வட்டாரத்தில் ஜவஹர் நகர் குடியிருப்பு உருவாகி, வீடுகள் 'முளைக்க'த் தொடங்கிய சமயம். சின்னதாய் ஒரு விநாயகர் சிலையை வாங்கிப் பத்துக்குப் பத்து சதுரத்தில் கோவில் கட்ட எண்ணினார்கள் அப்பகுதியினர். அயனாவரத்தில் ஒரு சிற்பியிடம் விநாயகர் சிலையைக் கேட்டபோது அறுநூறு ரூபாய் சொன்னார் அவர். கையிலிருந்த நானூறு ரூபாயைக் கொடுத்துவிட்டு இருநூறு ரூபாயை அப்புறம் தருவதாய்ச் சொல்லி வாங்கி வந்த சிலை தான் அமிர்த கணபதியாகக் கோவில் கொண் டுள்ளது. எட்டாண்டுகளுக்கு முன்னால் இடம் பிடித்த அமிர்த கணபதி, படிப்படியாக ஒரு முழுமையான ஆலயத்தையே உருவாக்கிவிட்டார்.

ஆலய நாயகர் பாலாஜி. கூடவே அபிராமி உடனுறை அமிர்தகடேசவ.;ர். இர்கே இந்தச் சைவ - வைணவத் திருக்கோவிலுக்குப் பெயர் 'ரஜனி - ராஜா ஆலயம்'. அரசியல், சினிமாச் சூழலில் வேறு மாதிரி எண்ணிவிடலாகாது. ரஜனி என்பது அழகின் இறைவனான பாலாஜி. ராஜா - வேறு யார்? ஆடலரசனாகிய சிவபெருமான்தான். (இங்கே அமிர்தகடேசுவரர்.)

**இந்த ஆலயத்தை உருவாக்குவதில் இஸ்லாமியர்கள், கிறிஸ்தவர்கள், சர்தார்ஜிக்கள் என்று சமய வேறுபாடின்றி அனைத்துத் தரப்பினரும் உதவியிருக்கிறார்கள்.**

இன்னும் கனக துர்க்கா, கார்த்தி கேயன், ஆஞ்சநேயர், தர்மசாஸ்தா, சூர்ய பகவான், நவக்கிரக தேவதைகள், நாகராஜ விநாயகர் என்று எல்லோருடைய தேவைகளுக்கும் நிறைவு தருகிற மாதிரி தெய்வத் திருவுருவங்கள் உள்ளன. வடமாநிலங்களில் பிரபலமான 'வைஷ்ணோதேவி'யைப் பிரதிஷ்டை செய்ய ஏற்பாடுகள் நடைபெறுகின்றன. ஜெய்ப் பூரிலிருந்து பளிங்கு மேனியோடு வரவிருக்கிறார் இந்த மாதா!

இங்கே ஆஞ்சநேயரையும் சாஸ்தாவையும் தவிர மற்ற தேவதைகள் கிழக்குப் பார்த்து



• அழகன்...

எழுந்தருளியிருப்பது ஒரு தனிப்பட்ட சிறப்பு.

பாலாஜியின் திருவுருவின் முன்னால் ஸ்ரீதேவி சமேதராய் எம்பெருமானின் உற்சவத் திருமேனியைக் காணலாம். இது திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் இந்த ரஜனி ராஜா ஆலயத்துக்கு வழங்கப்பட்டிருக்கிறது.

**சு**த்தமான சூழல்... சந்நிதியில் சிறு குப்பையைக் கூடப் போட்டுவிடக் கூடாது என்பதற்காக ஆங்காங்கே பிளாஸ்டிக் குப்பைக் கூடைகள் நம்மை எச்சரிக்கின்றன. தூண்களில் விபூதி குங்கும மிச்சம், சுவரோரமாய்ப் பற்றி எரியும் கற்பூரப் புகை - இந்த மாதிரிச் சமாசாரங்கள் எதுவுமே இல்லாத வியப்பூட்டும் தூய்மை. பக்தர்களின் மனமும் இப்படித் தூய்மை கெடாமல் இருக்க வேண்டும் என்பதற்காகத் தியான மண்டபம் அமைக்கப்பட்டு தியானப் பயிற்சி வகுப்புகள் நடக்கின்றன.

இதே தியான மண்டபத்தை இலவசமாகத் திருமணம் நடத்தவும் கொடுத்து உதவுகிறார்கள்.

ஜவஹர் நகரின் 1500 வீடுகளில் பல இன மக்கள் கலந்து வசித்து வருகிறார்கள். அவர்களின் தேவைக்காக ஏற்பட்ட ஆலயம் இது என்பதால், கோயிலின் பராமரிப்பு முழுவதையும் அனைத்துத் தரப்பினரையும் உறுப்பினர்களாய்க் கொண்டுள்ள ஆலய நிர்வாகக் குழு கவனித்துக் கொள்கிறது. தேவைப்படும் நிதி ஆதாரங்களை ஏற்படுத்தித் தருவது மட்டும் 'ரஜனி ராஜா அறக்கட்டளை' யின் பொறுப்பாக இருந்து வருகிறது.

ரஜனி ராஜா அறக்கட்டளையிலிருந்து ஆண்டுக்கு நூறு பேருக்குக் கல்யாண உதவியும் செய்கிறார்கள்.

• ஊனமுற்றோருக்கு உதவி

உலக மனவளம் குன்றியோர் நாள், ஊனமுற்றோர் நாள், உலக மூத்த குடிமக்கள் நாள் என்று மூன்று தினங்கள் தவிர ஆலயம் தொடங்கப்பட்டதை நினைவில் கொண்டு 'ரஜனி ராஜா நாள்' என்றும் கொண்டாடி வருகிறார்கள்.

இந்த நாட்களில் முதியோர், ஆதரவற்றோர் இல்லங்களில் உள்ளவர்களை வரவழைத்து அவர்களை மகிழ்வித்து உணவு, உடை எல்லாம் தருகிறார்கள். இதேபோல் மனவளர்ச்சி குன்றிய, ஊனமுற்ற குழந்தைகளுக்கும் உணவு தந்து ஆடைகள், பாட நூல்கள் எல்லாம் வழங்கி மகிழ்விக்கிறார்கள்.

இந்த ஆலயத்தை உருவாக்குவதில் இஸ்லாமியர்கள், கிறிஸ்தவர்கள், சர்தார்ஜிக்கள் என்று சமய வேறுபாடின்றி அனைத்துத் தரப்பினரும் உதவியிருக்கிறார்கள். சுற்றுச் சுவர்களில் கீதை வரிகளைப் போலவே பைபிள் கருத்துக்களும், திருமறைக் கருத்துக்களும் இடம்பெற்றிருப்பது மகிழ்ச்சிதரும் விஷயம்.

**— கலசைக்கிழார்**

# மாபெரும் முன் வெளியீட்டுத் திட்டம்

**ஐம்பெருங் காப்பியங்கள்** முதலானவை

## ஐம்பெருங்காப்பியங்கள்

ஜைனதத்துவநூலாசிரியர்
ஸ்ரீபுராணச்செம்மல்

பேராசிரியர் ஜெ. ஸ்ரீசந்திரன் எம்.ஏ. அவர்கள்உரையுடன் 1. சிவகசிந்தாமணி 2. சிலப்பதிகாரம் 3. மணிமேகலை 4. வளையாபதி 5. குண்டலகேசி

5 தொகுதிகள்

விலை ரூ.600 சலுகை விலை ரூ.420

## பதினெண் புராணங்கள்

உரைநடையில் - முதல் தொகுதியில்
பேரா. அ.ச. ஞானசம்பந்தம் எம்.ஏ.

1. பிரம்ம புராணம் 2. பத்ம புராணம் 3. விஷ்ணு புராணம் 4. வாயு புராணம் 5. பாகவத புராணம் 6. நாரத புராணம் 7. மார்க்கண்டேய புராணம் 8. அக்னி புராணம் ஆகிய முதல் எட்டுப் புராணம் அடங்கியது

விலை ரூ.90 சலுகை விலை ரூ.63

## பட்டினத்தார் பாடல்கள்

மூலமும் தெளிவுரையும்

உரை. பேரா. அ. மாணிக்கம் எம்.ஏ.

ஒரே தொகுதியில்

விலை ரூ.100 சலுகை விலை ரூ.70

## திருவிளையாடற் புராணம்

மூலமும் தெளிவுரையும்

உரை: இலக்கியத் தென்றல் ஜோதி, எம்.ஏ.

5 தொகுதிகள்

விலை ரூ.300 சலுகை விலை ரூ.210

## தாயுமானவர் பாடல்கள்

மூலமும் தெளிவுரையும்

உரை: பேரா. அ. மாணிக்கம் எம்.ஏ.

2 தொகுதிகள்

விலை ரூ.120 சலுகை விலை ரூ.84

முக்கிய அறிவிப்பு: பணம்(சலுகை விலை) அனுப்பக்கடைசிதேதி - 25.5.96

ஜூலை இறுதியில் நூல்கள் அனுப்பப்படும். குறித்த நேரத்தில் எவ்வளவு பேர் பணம் அனுப்புகிறார்களோ அந்த அளவுக்குத்தான் நூல்கள் அச்சிடத் தீர்மானித்திருக்கிறோம். ஆகவே நூல்கள் வேண்டுவோர் 25.5.96க்குள் பணம் அனுப்புக. வழக்கம்போல் V.P.P.யில் நூல்கள் அனுப்பப்படும். தபால் செலவினை மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெற்றுக் கொள்க.

M.O. or D.D. அனுப்ப வேண்டிய முகவரி: TAMIL NILAYAM, ARR Complex, 141, Usman Road, T. Nagar, Madras-600 017. Phone : 825 7995 Near Panagal Park



1996 மே 12
தாது சித்திரை 30
மலர் : 54
இதழ் : 41

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## வரலாறு காணாத தேர்தல்!

நடந்து முடிந்த தேர்தல் பல வகைகளிலும் வரலாறு காணாததாக அமைந்திருந்தது.

'சேஷன் எஃபக்ட்' என்றொரு புதுப்பதம் உருவாகும் அளவுக்கு, தேர்தல் ஆணையத்தின் நடவடிக்கைகள் அமைந்தன. தேர்தல் விதிமுறைகளை அமுல்படுத்துவதிலும் வழிகாட்டு நெறிகளை வலியுறுத்துவதிலும் முன்னெப்போதைக் காட்டிலும் கவனமும் அக்கறையும் செலுத்தப்பட்டது. உலகின் மிகப் பெரிய ஜனநாயக நாடான இந்தியாவில் இதைச் சாதித்தது பாராட்டுக்குரிய விஷயம்.

பாராளுமன்றத் தேர்தலைப் பொறுத்தவரை, கடந்த முறை போலவே எந்தவொரு கட்சிக்கும் அறுதிப் பெரும்பான்மை கிடைக்காமல் போகக் கூடிய இரண்டுங்கெட்டான் நிலை தான். ஆனால், தமிழ்நாட்டில் வாக்காளர்கள் ஆளுங்கட்சிக்கு எதிராக வரிந்து கட்டிக் கொண்டு புறப்பட்டு, ஒரு சரித்திரமே படைத்திருக்கிறார்கள். 'எல்லாத் தலைவர்களுமே ஊழல் பேர்வழிகள்தான்... யாருக்குத்தான் வோட்டுப் போட...?' என்ற சலிப்புணர்வைக் காட்டிலும் எதிர்ப்புணர்வே மேலோங்கிச் செயல்பட்டிருக்கிறது.

சேடப்பட்டி முத்தையா, நெடுஞ்செழியன், குமரி அனந்தன் போன்ற முன்னணித் தலைவர்கள் பிரசாரப் பயணங்களின்போது அவரவர் தொகுதிகளிலிருந்து விரட்டியடிக்கப்படாத குறையாக வெளியேற்றப்பட்டிருப்பது, இந்த எதிர்ப்புணர்வு காரணமாகத்தான்.




எங்கள் தொகுதிக்கு எதுவும் செய்யாதவர்கள் எங்களுக்கு வேண்டாம்;

ஊழல் செய்பவர்கள் எங்களுக்கு வேண்டாம்;

ஊழல் செய்வோருடன் கூட்டணி வைத்துக் கொள்வோர் எங்களுக்கு வேண் டாம்;

ஜனநாயக மரபுகளைக் காக்கத் தவறியவர்கள் எங்களுக்கு வேண்டாம்....

என்று, உணர்வுபூர்வமாக மட்டுமின்றி அறிவுபூர்வமாகவும் முடிவெடுத்துள்ளார்கள் தமிழக மக்கள். எடுத்த முடிவைத் தீர்மானமாகச் செயல்படுத்தும் வகையில் திரண்டெழுந்து வாக்களித்திருக்கிறார்கள். சில இடங்களில் எழுபது சதவிகிதம் கூட வாக்குப் பதிவு நடைபெற்றிருக்கிறது.

இவற்றைப் பார்க்கும்போது மக்களிடையே விழிப்புணர்வு பெருகி வருவது தெரிகிறது. அரை நூற்றாண்டு காலத்தில் நமது ஜனநாயகம் வளர்ந்து, முதிர்ந்த நிலையை நோக்கிச் சென்று கொண்டிருப்பதற்கான அறிகுறி இது.

கட்சிப் பத்திரிகைகள் தவிர, இதர இதழ்கள் எல்லாமே ஒட்டுமொத்தமாக ஆளும் கட்சியை எதிர்த்து வலுவாக எழுதியதும் இந்தத் தேர்தலையொட்டித்தான். தொலைக்காட்சி மூலம் பிரசாரம், கட்சி யுத்தம் என்ற புதிய கவைஊட்டப்பட்டதும் இந்தத் தேர்தல் நாடகத் தில்தான்.

ரஜினிகாந்த் என்ற ஒரு தனி மனிதர், களத்தில் இறங்காமல் கரையில் நின்றபடியே ஆதரவு வெள்ளத்தின் போக்கை நிர்ணயித்து, புதிய பரிமாணத்தைப் பெற்றுயர்ந்ததும் இந்தத் தேர்தலில்தான்!

காங்கிரஸ் கட்சியில் பிளவு ஏற்படுவதும் போட்டி காங்கிரஸ் வேட்பாளர்கள் தேர்தலில்

நிற்பதும் பழைய கதைதான்... ஆனால் போட்டி காங்கிரஸே மெய்யான காங்கிரஸாகி 'ஒரிஜினல்' கட்சியை இருக்கும் இடம் தெரியாமல் அடித்தது இந்தத் தமிழக சட்டமன்றத் தேர்தலில் மட்டுமே நடந்துள்ள அதிசயம்!

வரலாறு காணாத ஊழல் புரிந்து, வரலாறு காணாத அளவில் நீதிமன்ற வழக்குகளைச் சந்தித்துக் கொண்டிருக்கும் ஒரு முதல்வர் தமக்கு வாக்களிக்கச் சொல்லி மக்களிடம் கேட்டதுகூட வரலாறு காணாத விஷயமே!

இவ்வாறு வரலாறு காணாத வகையில் நடைபெற்றுள்ள பல சம்பவங்களின் சேர்க்கையால் மக்களின் ஆதரவும் கவனமும் தி.மு.க. - த.மா.கா. கூட்டணி பக்கம் திரும்பியிருக்கிறது.

'டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி போன்ற சமூக அக்கறையுள்ள நபர்களை ஆதரிக்காதது ஏன்? தவறுகள் புரிந்தவர் எனத் தெரிந்தும் கருணாநிதியை ஆதரிப்பது ஏன்?' என்று கல்கி போன்ற பத்திரிகைகளை நோக்கிக் கேள்விகள் எழுப்பப்படுகின்றன.

சமூக நலனில் அக்கறையுள்ள நபர்களுக்கு நமது ஆதரவு உண்டு. (இவர்களுக்கு இடம் அளிக்கவே மேல்சபையை மீண்டும் கொண்டுவர வேண்டும் என்று வலியுறுத்துகிறோம்.) எனினும் வோட்டுகள் பிரிவதன் மூலம் மீண்டும் ஜெ. ஆட்சியில் தமிழகம் சிறைப்பட்டுப் போகக் கூடாது என்கிற நோக்கிலே - தவறு மேல் தவறு செய்த ஆளுங் கட்சிக்குப் பாடம் புகட்ட வேண்டும் என்ற நோக்கிலே பத்திரிகைகள் எழுதி வருகின்றன. கருணாநிதி ஆதரவு என்பதைவிட ஜெ. எதிர்ப்பு என்கிற நோக்கு அதிகம். பெரும்பாலான தமிழக மக்களின் மனோநிலையும் இதுதான்.

அடுத்து ஆட்சிக்கு வரப்போகிற அரசு இந்த உண்மையை உணர்வது மிக மிக அவசியம்.

# டிட்டி ®




பனியன்கள்

ஜட்டிகள்

பேண்டீஸ்

மற்றும்

T. ஷர்ட்ஸ்





குழந்தைகளுக்கென்றே
பிரத்யேகமான ஆடை வகைகள்!

| | | |
|---|---|---|
| H.O. | : | DITTY HOSIERIES, P.B. NO. 410, TIRUPUR. Ph : 21611 |
| Madras | : | DITTY KNITTERS, STN Road, West Mambalam. Ph : 483 9816 |
| Madurai | : | DITTY HOSIERIES, 157 South Ma[illegible] St., Madurai - 625 001 |
| Bangalore | : | DITTY KNITTERS, Cubbonpet, Bangalore - 2. Ph : 2216208 |



• படம் - உதவி : நக்கீரன்

# டீவி தேர்தல்!

இந்தத் தேர்தலின் ஹீரோ, ரஜினிகாந்த். அவரது அறிக்கைகள் ஏற்படுத்திய பாதிப்பையெல்லாம் தூக்கிச் சாப்பிட்டுவிட்டது, அவரது டீ.வி. பேச்சு. சொல்லப்போனால், ஜனவரியில் - பொங்கல் சமயம் எஸ். வி. ரமணன் தயாரித்த ரஜினி பதில்கள் நிகழ்ச்சியிலேயே இதற்கான பிள்ளையார் சுழி போடப்பட்டுவிட்டது!

தனியார் தொலைக்காட்சிகளுக்கு, ரஜினியின் இந்தத் திடீர் அரசியல் முகம் ஓர் ஊக்க போனஸாக அமைந்துவிட, அதை வைத்துக் கொண்டு, தேர்தல் களத்தை விண்ணில் இருந்து ஜோராகச் சுற்றிக் காட்டத் தொடங்கி விட்டார்கள்! தோதாக, 'தனியார் சானல்களும் தினசரிகளைப் போலத்தான்; அவற்றின் தேர்தல் தொடர்பான நிகழ்ச்சிகளுக்குக் கட்டுப்பாடு அவசியமில்லை' என்று தேர்தல் கமிஷன் வேறு சொல்லிவிட, கடிவாளமில்லாமல் பறக்கத் தொடங்கிவிட்டார்கள்!

ஜெ.ஜெ. டீ.வி. தம் 'சேவை'யை முழுக்க முழுக்க ஜெயலலிதா துதி பாடுவதற்குப் பயன்படுத்திக் கொண்டது. அ.தி.மு.க. - காங்கிரஸ் கூட்டணி, அறிவித்த தினத்தில் தமிழகமே கொந்தளித்துப் போனது அனைவருக்கும் தெரியும். அன்றைய தினம் ஜெ.ஜெ.வில் சிறப்புச் செய்தியாக (flash news) அந்த அறிவிப்பு குறித்து, 'தமிழகமே குதூகலிக்கிறது...' என்று வெளியிட்டார்கள்!

தேர்தல் நெருங்க, நெருங்க ஜெ.வின் சுற்றுப்பயணங்கள், பிரசாரக் கூட்டச் சொற்பொழிவுகள், அமைச்சர்களின் பேச்சுக்கள், ஜெ. ஆதரவுச் 'சிந்தனையாளர்'களின் பேச்சுக்கள், எம்.ஜி.ஆர். பாடல்கள் என்று ஏறத்தாழ பிரசார மேடையாக்கி விட்டார்கள்.

போதாக்குறைக்கு 'கருணாநிதியின் சாதனைகள்' என்ற ஏமாற்றும் தலைப்புடன், மு.க. ஆட்சிக் காலத்து சீர்கேடுகளைத் தேடிப் பிடித்து, தூசிதட்டி ஒளிபரப்பினார்கள்.

தேர்தல் பிரசாரம் என்பது தாண்டி, தனி மனித துவேஷம் வெளிப்படையாகவே தெரியும்படியாக நிகழ்ச்சிகள் அமைப்பது ஏன்? தவிர, டீ.வி. என்கிற ஒரு மக்கள் தொடர்புச் சாதனம் தனி மனிதத் துதி/துவேஷத்துக்குப் பயன்படுத்தப்படுவதைப் பெரும்பாலான மக்கள் விரும்புவதில்லை என்று தெரிய வரும்போது ஏன் இந்த முயற்சி?

- கேட்பதற்காக ஜெ.ஜெ. டீ.வி. பாஸ்கரனைத் தொடர்பு கொள்ள பலமுறை முயன்றும் அவர் கிடைக்கவில்லை.

ஜெ. ஜெ. டீ.வி.யின் இந்தப் போக்கு குறித்துச் சில டீ.வி. பிரியர்களிடம் பேசிப் பார்த்த போது, தனி நபர் துவேஷம் எதிர்மறையான விளைவுகளையே ஏற்படுத்துகிறது என்றார்கள்.

தி.மு.க.வின் பகிரங்க பிரசார பீரங்கியாக இல்லாமல் இலைமறை காயாகச் செயல்பட்டது சன் டீ.வி.யின் சாமர்த்தியம். செய்திகளில் அ.தி.மு.க. தலைவியின் பேச்சுக்கள் அப்படியே ஒளிபரப்பாயின. 'இது தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் இடையிலான போர்' என அவர் வழக்கம் போல் கூறினார்..." என்று ஒவ்வொரு நாளும் செய்தி வாசித்தபோது, அதை வாசிப்பவர் இலேசாகச் சிரிக்கிறாரா...



அல்லது நமது பிரமையா...? என்று சந்தேகம் வரும் அளவுக்கு சூட்சுமமான தயாரிப்பு!

தேர்தலையொட்டி ஆரம்பமான சன் டீ.வி. செய்தி ஒளிபரப்புக்கு வரவேற்பு எப்படி...?

''மக்கள் அளிக்கும் ஆதரவு எங்களுக்குத் தெம்பை அளித்திருக்கிறது'' என்றார் கலாநிதி மாறன். 234 பகுதி நேர நிருபர்களை - ஒரு தொகுதிக்கு ஒருவர் என்ற விகிதத்தில் இதற்காக நியமித்திருக்கிறோம். சென்னையில் மட்டும் பதினாலு நிருபர்கள். மற்ற மாநிலங்களைப் பொறுத்தவரை ஏஷியாநெட், ராய்டர், உதயா டீ.வி. ஆகியவற்றுடன் டை-அப் வைத்திருக்கிறோம். பதினைந்து நிமிடச் செய்தியில் எட்டு நிமிடங்கள் விஷுவல் காண்பிக்கிறோம்'' என்றார்.

தேர்தல் முடிந்த பிறகும் கூடச் 'செய்திகள்' தொடருமா?

"மற்ற பல நிகழ்ச்சிகளைவிட இதற்கு ஆகும் செலவு மிக அதிகம். இதே அளவு பார்வையாளர் ஈடுபாடும், விளம்பரங்களும் தொடர்ந்தால் செய்திகளும் தொடரும்" என்றார்.

"வாக்கு செல்வாக்கு" போன்ற தேர்தல் கணிப்பு நிகழ்ச்சியை இவர்களே தயாரிக்காமல் ஸ்பான்ஸர்களிடம் விட்டது ஏன்? (நிகழ்ச்சியை வழங்குபவர் மாலன்).

"நேரடியாகவோ மறைமுகமாகவோ நாங்கள் எந்த அரசியல் கட்சியையும் ஆதரிப்பதான எண்ணம் மக்களிடையே வந்துவிடக் கூடாதே என்பதற்காகத்தான். பனைமரத்தடியில் நின்று கொண்டு பாலைக் குடித்தாலும் தப்பாக நினைக்கலாமில்லையா...?"

தனியார் சானல்களினால் வாக்காளர்களின் மனத்தை மாற்ற முடியுமா? அந்த அளவு அவர்களுக்கு வீச்சு இருக்கிறதா?

"தனியார் சானல்கள் என்றில்லை. எந்த ஒளிபரப்பினாலுமே வாக்காளர்களின் மனத்தை மாற்றிவிட முடியும் என்று தோன்றவில்லை. அப்படிப் பார்க்கப் போனால் தூர்தர்ஷன் பெரும்பாலும் மத்திய அரசின் பிரசார பீரங்கியாகத்தானே செயல்பட்டு வந்திருக்கிறது? ஆனால் மத்திய அரசு வெவ்வேறு கட்சிகளின் கையில் மாறி மாறித்தானே சென்றது!" என்பது கலாநிதி மாறனின் வாதம்.

இது உண்மையானால், ரஜினி டீ.வி. மூலமாகப் பிரசாரம் செய்வார் என்று முடிவு அறிவிக்கப்பட்டதும், அவர் அதே சன் டிவி.யில் தோன்றி கலைஞர்ஜிக்கும் மூப்பனார்ஜிக்கும் வாக்களிக்கும்படி கேட்டது எந்த நம்பிக்கையின் அடிப்படையில்...? 'டைமிங்' பார்த்து வீரப்பன் பேட்டி ஒளிபரப்பானது எதற்காக? ஏப்ரல் 14 ஆம் தேதி நடந்த கலைஞரின் திரையுலகப் பொன்விழா நிகழ்ச்சித் தொகுப்பு ஏப்ரல் இறுதியில் ஒளிபரப்பானது ஏன்...?

"தனியார் சானல்களைப் பார்ப்பது மேல் நடுத்தர மற்றும் மேல்தட்டு மக்கள்தான். இவர்களில் கணிசமானவர்கள் சுயமாகச் சிந்தித்து முடிவெடுப்பவர்கள் எனும்போது அவர்கள் மனத்தை மாற்றும் விளைவையெல்லாம் தனியார் சானல்களால் ஏற்படுத்தவே முடியாது'' என்கிறார் ரபி பெர்னார்ட்.

''அமெரிக்காவில் நடப்பதைப் போன்று இங்கும் முக்கிய கட்சித் தலைவர்கள் நேருக்கு நேர் நடத்தும் விவாதம் ஒன்றை ஏற்பாடு செய்வதுதான் நியாயமான உத்தியாக இருக்கும். ஆனால் தமிழ் நாட்டிலுள்ள முக்கிய தனியார் தொலைக் காட்சிகள் கட்சி சாயம் கொண்டவை. இந்த நிலையில் அவற்றினால் இது போன்ற ஆரோக்கியமான விவாதச் சூழலை ஏற்படுத்த முடியாது" என்றார்.

இவரது வி.ஐ.பி. தொகுதிகள் நிகழ்ச்சிக்கு எந்த அடிப்படையில் தொகுதிகளைத் தேர்ந்தெடுத்தார் என்று கேட்டோம்.

"கட்சித் தலைவர்கள், அமைச்சர்களின் தொகுதிகள்... தவிர, குவாலியரில் அரண்மனை, போபாலின் விஷவாயு கசிவு சரித்திரம் போன்ற சுவையான மெட்டீரியல்ஸ் கிடைத்ததால் அந்த இடங்கள் சேர்க்கப்பட்டன...'' எனும் ரபி பெர்னார்ட், தான் ஒன்றும் ரொம்பவும் விஞ்ஞானபூர்வமாகக் கருத்துக் கணிப்பு நடத்தி விடவில்லை என்பதையும் ஒப்புக் கொள்கிறார்.

பின் இந்த நிகழ்ச்சி



• கலாநிதி மாறன்



• ரபி பெர்னார்ட்



• நடராஜன்



கள் எதற்காக!

"பொங்கலின்போது ஜல்லிக்கட்டு பார்ப்பதில்லையா? அதுபோல் இதுவும் சுவையான பொழுதுபோக்குக்காகத் தான். தேர்தல் சமயத்தில் முக்கிய வேட்பாளர்களின் உணவுப் பழக்கங்கள், அவர்கள் படித்த பள்ளிக்கூடம் போன்ற விவரங்களையெல்லாம் பத்திரிகைகள் அப்போதைய ட்ரென்ட்டுக்கு ஏற்ப பிரசுரிப்பதில்லையா? அதுபோலத்தான் இந்த நிகழ்ச்சிகளும்..."

ரபி பெர்னார்ட் சொன்ன கருத்துக்களைக் கட்டுரையாக்குவதற்கு முன் தினம் அவரே டீ.வி.யில் பேசிய தென்னவோ முற்றிலும் மாறுபட்டிருந்தது :

"இது சாடிலைட் தேர்தல், டெலிவிஷன் தேர்தல்" என்று தமது வி.ஐ.பி. தொகுதி நிகழ்ச்சிக்கு முத்தாய்ப்பாகக் கூறி முடித்தார்!

"தனியார் தொலைக்காட்சிகள் வாக்காளர்களை நிச்சயம் இம்ப்ரெஸ் செய்யும். மேடைப் பேச்சைக் கேட்கத் தெருவுக்கு வராதவர்களின் வீட்டுக்கே வந்து கருத்துக்களைப் பதிய வைக்க இந்த முறையினால் முடியுமே" என்று அழுத்தமாகக் கூறினார் ராஜ் டீ.வி. ராஜேந்திரன்.

'தேர்தல் களத்தில் இவர்கள்' என்ற தலைப்பில் 'முக்கியஸ்தர்களின்' தேர்தல் பிரசாரங்களைப் படம் பிடித்து ஒளிபரப்பினார்கள் ராஜ் டீ.வி.யினர். தவிர, 'ராஜ்பார்வை' என்ற பெயரில் ஒவ்வொரு வாரமும் செய்திகளையும் ஒளிபரப்பி வருகிறார்கள்.

"இதைத் தயாரிப்பது நாங்களல்ல. புதுடெல்லியிலிருக்கும் ஏ அண்ட் என் நிறுவனம்தான். ஜீ டீ.வி., பிஸினெஸ் டீ.வி. போன்றவற்றிற்கும் இவர்களே செய்திப் படங்களை வினியோகிப்பதால் ஒரு 'பாக்கேஜ் டீல்' போல் எங்களிடமிருந்து நியாயமான தொகையை வாங்கிக் கொள்கிறார்கள். இல்லையென்றால் செய்திகள் என்பது ரொம்பவும் காஸ்ட்லியான சமாசாரமே" என்றார் ராஜேந்திரன்.

தனியார் சானல்கள் அளிக்கும் இதுபோன்ற சூடான தேர்தல் நிகழ்ச்சிகளின் பக்கம் மக்கள் கவனம் திரும்பிவிட, தூர்தர்ஷன் 'செய்திகளி'ன் மவுசு குறைந்திருக்கிறதா?

"வாய்ப்பே இல்லை. நூறு வீடுகளில் தூர்தர்ஷன் ஒளிபரப்பாகிறதென்றால், 22 வீடுகளில் தான் கேபிள் கனெக்ஷன் கொடுத்திருக்கிறார்கள்" என்று புள்ளி விவரத்தைச் சுட்டிக் காட்டினார் சென்னைத் தொலைக்காட்சி நிலைய இயக்குனர் நடராஜன்.

உண்மைதான். ஆனால் அந்த 22 வீடுகளிலும் செய்திகளைப் பொறுத்தவரையில் தனியார் சானல்களுக்கு மாறி விட்டிருக்க வாய்ப்பு உண்டா?

"பலப்பல வருடங்களாக செய்தி சேகரிப்பில் அனுபவம் பெற்றவர்கள் நாங்கள் என்பதையும், எங்களுக்கென்று திறமையான ஒரு செய்திப் பிரிவு இருக்கிறது என்பதையும் மறந்துவிட்டு இப்படிக் கேட்கலாமா? நம்பகத்தன்மை எங்கள் செய்திகளில் நிச்சயம் அதிகம்" என்ற நடராஜன், "மக்களின் தேர்தல் ஆர்வத்தை உணர்ந்து சுடச்சுட அவர்களுக்குத் தேர்தல் விவரங்களை அறிவிக்க முயற்சிகளை மேற்கொண்டிருக்கிறோம்" என்றார்.

எப்படி?

"மொத்த வாக்குப் பதிவுகளும் முடிந்த அடுத்த நொடியே நாங்கள் கருத்துக் கணிப்புகள் செய்து ஒளிபரப்ப இருக்கிறோம். மே எட்டாம் தேதி மதியத்திலிருந்து பத்தாம் தேதி வரை இடைவிடாமல் தேர்தல் தொடர்பான நிகழ்ச்சிகளைத் தான் ஒளிபரப்பப் போகிறோம். வேறெந்த நிகழ்ச்சிகளும் இந்த 36 மணி நேரங்களுக்கு ஒளிபரப்பாகாது."

விண்வழி வரும் தேர்தல் செய்திகளுடன் போட்டி போட வேண்டிய கட்டாயம் பத்திரிகைகளுக்கு இருந்தும் பல பத்திரிகை முகங்களைச் சின்னத் திரையின் தேர்தல் ஆய்வு நிகழ்ச்சிகளில் காண முடிந்தது. தேர்தலுக்குப் பல மாதங்கள் முன்பிருந்தே தமது 'டாக் ஷோ' நிகழ்ச்சிகளில் ஆரோக்கியமான அரசியல் விமர்சனங்களுக்கு வழி செய்தார் சோ.

இவ்வளவுக்குப் பிறகும் தமிழகத்தின் வாக்களிப்பு patternஐயும் தேர்தல் முடிவுகளையும் டீ.வி. நிகழ்ச்சிகள் பாதிக்காது என்று சொல்வது ஏற்க முடியாததாக இருக்கிறது. வெற்றி தோல்விகளில் டீ.வி.யின் பங்கு இன்னதென்று இம்முறை நிர்ணயித்துச் சொல்ல முடியாது போகலாம். ஆனால் அந்தப் பங்கு எதிர்காலத்தில் அதிகரிக்கும் என்பதற்கான வலுவான அடையாளங்கள் இப்போதே தெரிகின்றன.

— அருண் சரண்யா

# காசி சேமிப்புத் திட்டம் :

அ) மாதம் ரூ.200/- வீதம் 25 மாதங்களுக்கு செலுத்தி வரவேண்டும். 250 உறுப்பினர்கள் கொண்ட இத்திட்டத்தில் பிரதி மாதம் குலுக்கல் முறையில் ஒரு உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்படுவர். குலுக்கலில் வெற்றி பெற்ற அதிர்ஷ்டசாலி ரூ.5,500/- மொத்தமாக உடனே பெறலாம். மீத தவணைகளை செலுத்த வேண்டியதில்லை. குலுக்கல் 25 மாதமும் நடைபெறும் வகையில் ஒவ்வொரு மாதமும் ஒரு உறுப்பினர் மட்டும் தேர்ந்தெடுக்கப்படுவர். 25வது மாத முடிவில் குலுக்கலில் தேர்வு பெறாத 225 உறுப்பினர்கள் தலா ரூ.5,500/ மொத்தமாக பெறலாம்.

ஆ) மாதம் ரூ.200/- வீதம் 45 மாதங்களுக்கு செலுத்தி வரவேண்டும். 250 உறுப்பினர்கள் கொண்ட இத்திட்டத்தில் பிரதி மாதம் குலுக்கல் முறையில் ஒரு உறுப்பினர் தேர்ந்தெடுக்கப்படுவர். குலுக்கலில் வெற்றி பெற்ற அதிர்ஷ்டசாலி ரூ.10,000/- மொத்தமாக உடனே பெறலாம். மீத தவணைகளை செலுத்த வேண்டியதில்லை. குலுக்கல் 45 மாதமும் நடைபெறும் வகையில் ஒவ்வொரு மாதமும் ஒரு உறுப்பினர் மட்டும் தேர்ந்தெடுக்கப்படுவர். 45வது மாத முடிவில் குலுக்கலில் தேர்வு பெறாத 225 உறுப்பினர்கள் தலா ரூ.10,000/- மொத்தமாக பெறலாம்.

## 4 பொன்னான சேமிப்பு திட்டங்களில் சேர்ந்து ரூ. 2 இலட்சம் மதிப்புள்ள பரிசுகளை வெல்வீர்!

### காசி ரொக்கப் பத்திர திட்டம் :

அ) ரூ.860/-ஐ 12 மாதங்களுக்கு வைப்பு நிதி செய்து 12-வது மாத முடிவில் முடிவில் ரூ.1,000/- மொத்தமாக பெறலாம். ஆ) ரூ.640/-ஐ 36 மாதங்களுக்கு வைப்பு நிதி செய்து 36-வது மாத முடிவில் முடிவில் ரூ.1,000/- மொத்தமாக பெறலாம். இ) ரூ.475/-ஐ 60 மாதங்களுக்கு வைப்பு நிதி செய்து 60-வது மாத முடிவில் முடிவில் ரூ.1,000/- மொத்தமாக பெறலாம். இத்திட்டத்தின்படி குறைந்த முதலீடு செய்து குறுகிய காலத்தில் அதிக லாபம் பெறலாம். இப்பத்திரத்தினை தங்களது அன்பானவர்களுக்கு பரிசாகவும் அளிக்கலாம்.

### காசி ரெக்கரிங் டெபாஸிட் திட்டம்

| குறைந்தபட்ச தொகை ரூ. | மாதங்கள் | முதிர்வுத் தொகை ரூ. |
|---|---|---|
| 100 | 12 | 1,302/- |
| | 24 | 2,784/- |
| | 36 | 4,568/- |
| | 48 | 6,604/- |
| | 60 | 8,968/- |

### காசி பென்ஷன் திட்டம்

| மாதத் தவணை | வருடங்கள் | முதிர்வுத் தொகை ரூ. | பென்சன் தொகை ரூ. |
|---|---|---|---|
| ரூ.50 | 10 | 13,932/- | 175/- |
| ரூ.100 | 10 | 27,866/- | 350/- |
| ரூ.200 | 10 | 55,731/- | 700/- |
| ரூ.500 | 10 | 1,39,328/- | 1,750/- |
| ரூ.1,000 | 10 | 2,78,657/- | 3,488/- |




**காசி பைனான்ஸ் & இன்வெஸ்மெண்ட்ஸ்**
**காசி ஹவுசிங் & டெவலப்மெண்ட் லிட்.**

ஞாயிறு அலுவலகம் உண்டு


**தலைமை அலுவலகம் :** 91-92, ஜவஹர்லால் நேரு சாலை, காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ், அசோக் நகர், சென்னை - 600 083. போன் : 4822206, 4825506, 4821969, 4896409, 4896373 பேக்ஸ் : 044 4825505. **கிளைகள் சென்னை :** சைதாப்பேட்டை : 13, கிழக்கு ஜோன்ஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை-15, போன் : 456484 மைலாப்பூர் : 140, முதல் மாடி, ஷாப் எண் 19 சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ், ராயப்பேட்டை ஹை ரோடு, மயிலாப்பூர், சென்னை-600 04. திருவான்மியூர் : ஷாப் எண் 10, சிவம் ஆர்கேடு, எண்-64, எல்.பி.ரோடு, திருவான்மியூர், சென்னை-600 041. அம்பத்தூர் : எண் 11, சப்தகிரி பிளாட், எம்.டி.எச்.ரோடு, அம்பத்தூர், சென்னை-600 053. போன் : 682592. திருச்சி : 5/B, 25, ஜெனனி பிளாசா, 5, பாரதியார் சாலை, கன்டோன்மெண்ட், திருச்சி-621 001. போன் : 466063 32B/2, 2வது மாடி, வில்லியம்ஸ் ரோடு, டாப் காம்ப்ளக்ஸ், மூன்றாவது மாடி, கன்டோன்மெண்ட், திருச்சி-1. போன் : 466002 மதுரை : 246A நாயக்கர் புதுத் தெரு, முதல் மாடியில் மத்தி சினிமா தியேட்டர் எதிரில் மதுரை-625 001. போன் : 541190. கோவை : ஒப்பி டவர்ஸ், 594/4, டி.பி. ரோடு, ஆர்.எஸ். புரம், கோயம்புத்தூர்-641 002. போன் : 444656. பெங்களூர் : 33, 2வது மாடி, கார்ப்பரேஷன் நம்பர் 400, ஒலிவ காம்ப்ளக்ஸ், சம்பக் ரோடு, 6வது நெடுக்குத் தெரு அருகில் மல்லேஸ்வரம்-3 போன் : 3363351 1532, 26வது மெயின், 9வது பிளாக், ஜெயின் பேக்கரி மாடியில், ஜெயநகர், பெங்களூர்-560 041. போன் : 6652480. மைசூர் : 20, முதல் மாடி, தேவராஜ் அர்ஸ் சாலை, மைசூர்-570 001. போன் : 35997 குண்டூர் : 4-8-14 மெயின் ரோடு, கொத்தப்பேட்டை, குண்டூர் 522007. போன் : 355257. மும்பாய் : எண் 203A, ஸ்ரீராம் தர்ஷன், வீழ்த்தளம் (opp) பலமோட்டார்ஸ் சியான் மெயின் ரோடு, சியான் கிழக்கு மும்பாய்-2. போன் : 4079414, 4079455.

# உலகைச் சுற்றி....

## பாகிஸ்தானின் ரஜினிகாந்த்!

இம்ரான்கான். உலகில் பெருமளவுக்கு இன்னும் ரசிகர்களைப் பெற்றிருக்கும் இந்த முன்னாள் கிரிக்கெட் கேப்டன், இப்போதைக்கு பாகிஸ்தானின் ரஜினிகாந்த்.

'ஊழல் நிறைந்த இப்போதைய பாகிஸ்தானின் அரசியல் முறைகள் அடியோடு ஒழிய வேண்டும். அரசியல்வாதிகள் தெளிந்த நீரோடை போலச் செயல்பட வேண்டும். மக்கள் மாற்றத்தை விரும்புகிறார்கள். அந்த விருப்பத்தை நிறைவேற்றும் வகையில் எனது எதிர்கால நடவடிக்கைகள் அமையும்' என்று முழங்கிக் கொண்டிருக்கிறாரே தவிர, இதுதான் என் நடவடிக்கை என்று தீர்மானமாக எதையும் மக்கள் முன் வைக்கவில்லை.





"களம் தயார். இம்ரான் தான் இன்னும் தயாரில்லை."

புற்றுநோயால் இறந்த தன் தாயாரின் நினைவாக 'புற்றுநோய் மருத்துவமனை' ஒன்றை லாகூரில் பெரிய அளவில் நிறுவியதன் மூலம் பொதுவாழ்வில் தன்னை அடையாளம் காட்டிக் கொண்டார் இம்ரான்.

ஏப்ரல் மாதம் பதினாலாம் தேதி இந்த மருத்துவமனையின் புறநோயாளிகள் பகுதியில் பயங்கர வெடிகுண்டு விபத்து ஏற்பட்டது. குண்டு வெடித்ததில் ஆறு பேர் பலி. ஏராள காயம்.

இதுதான் சமயம் என்று இம்ரான்கானிடம் நல்ல பெயர் சம்பாதித்துக் கொள்ளும் முயற்சியாக பிரதமர் பேனஸீர் புட்டோ ஹாஸ்பிடலுக்கு வந்து பார்த்து ஆறுதல் சொன்னார். 'மருத்துவமனையின் பழுதடைந்த பகுதிகளை அரசு தன் செலவிலேயே புதுப்பித்துத் தரும்' என்றும் அறிவித்தார்!

இம்ரான்கானை நேசிப்பதன் மூலம் பேனஸீர் எதிர்ப்புத் தீயை இன்னும் வேகமாக விசிறி விட முடியும் என்ற ஆசையில் எதிர்க்கட்சித் தலைவரும், முன்னாள் பிரதமருமான நவாஸ் ஷரீப் ஓடிவந்து மருத்துவமனையைப் பார்வையிட்டார்.

பேனஸீருக்கு எதிராக இம்ரான் வரிந்து கட்டிக் கொண்டிருப்பதில் சந்தேகமோ ரகசியமோ ஏதுமில்லை.

இப்போது, 'டெஹ்ரீக்-இ-இன்ஸாஃப்' என்ற ஓர் அமைப்பைத் தொடங்கியிருப்பதாக இம்ரான் சில நாட்கள் முன்பாக அறிவித்தார். (தமிழில் 'நீதிக்கான இயக்கம்' என்று அர்த்தம்)

இம்ரான்கான் தொடங்கும் எந்தவிதமான பொதுநல இயக்கத்தையும் வரவேற்று, அதனோடு செயலாற்றி, பேனஸீருக்கு எதிரான அலை ஒன்றை வேகப்படுத்த எதிர்க்கட்சி அங்கே முனைப்பாக இருக்கிறது.

ஆனால் இம்ரான்கானுக்குச் சில சங்கடங்கள் :

பாகிஸ்தானில் அரசியல் குழப்பம் ஏற்படும் போது ராணுவம்தான் நீதிபதியாக செயல்படுவது வழக்கம். ராணுவத்துடன் இம்ரான்கானின் அணுகுமுறை என்னவாக இருக்கும் என்பது முதல் சங்கடம்.

இரண்டாவது சங்கடம் ஜெமீமா. இம்ரான்கானின் மனைவி. 'இஸ்லாமிய மதத்தை விட்டு, ஒரு வெள்ளைக்காரப் பெண்ணை கட்டிக் கொண்டானே இந்த இம்ரான்' என்று ஏற்கெனவே பாகிஸ்தானின் இஸ்லாம் தீவிரவாதிகள் கொதித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களை இவர் எப்படிச் சமாளிக்கப் போகிறார்?

மூன்றாவதாக இம்ரான் அடித்த அடி. பந்தையல்ல... தன்னிடம் இக்கட்டான ஒரு கேள்வியைக் கேட்டுவிட்ட ஒரு பத்திரிகையாளரின் கன்னத்தில் போட்ட பளார்! 'அவரை ஏன் நான் அறைந்தேன்' என்று இன்னும் திருப்திகரமான விளக்கம் எதையும் தராமல் இம்ரான் மௌனம் சாதிக்கிறார்.

உலக அரசியல் நோக்கர்களின் கணிப்பு :

"களம் தயார். இம்ரான் தான் இன்னும் தயாரில்லை."

- ராணிமைந்தன்

"உங்கள் தோழி ரேவதிக்காக வோட்டுக் கேட்கச் சென்ற அனுபவம் எப்படி இருந்தது ரோகிணி?"

"நல்ல அனுபவம். பொதுவாகவே நம்மைப் போன்றவர்கள், குடிசைப் பகுதி மக்களுக்கு அதைச் செய்ய வேண்டும்; இதைச் செய்ய வேண்டும்; சுகாதாரம் பற்றியெல்லாம் அவர்களுக்குச் சொல்லித் தர வேண்டும் என்றெல்லாம் நிறையவே பேசுவோம். நானும் அப்படிப் பேசியிருக்கிறேன். நாம் குடியிருக்க நல்ல வீடு இருக்கிறது; போட்டுக் கொள்ள நல்ல துணிமணிகள்

# வாழ்க்கையில் இல்லாத வன்முறையா?

இருக்கின்றன. இந்த அடிப்படைப் பாதுகாப்பில்தான் நாம் அப்படியெல்லாம் பேசுகிறோம் என்பது அவர்களைச் சென்று சந்தித்துப் பேசிய போதுதான் புரிந்தது. அவர்களுடைய நிஜமான பிரச்னைகளை உணர முடிந்தது. தேர்தலில் வெற்றியோ, தோல்வியோ அதுவல்ல விஷயம்! எனது சொல்லுக்கும் செயலுக்கும் நடுவிலிருக்கும் இடைவெளி மிகவும் குறைந்துபோக இந்த அனுபவம் உதவியிருக்கிறது; எதிர்காலத்தில் அந்த இடைவெளி இல்லாமலே போவதற்கும் இந்த அனுபவம் உதவியாக இருக்கும் என்கிற அளவில் சந்தோஷம் தருகிற ஒரு விஷயமாகவும் இந்த அனுபவம் இருக்கிறது."

"அப்படியானால், வோட்டுக் கேட்கச் சென்றதோடு நின்று விடாமல் தேர்தல் முடிவுகளுக்குப் பிறகும் அதுபோன்ற பகுதிகளுக்குச் செல்வீர்களா?"

"நிச்சயமாக. ஒரு குடிசைப் பகுதியில் பட்டதாரிப் பெண் ஒருவர் இருப்பதையும் பார்த்தேன். அவரைப் போன்றவர்கள் ஒரு பாதுகாப்பான வேலை கிடைத்ததும், தான் முன்பு இருந்த அந்தப் பகுதியை முற்றிலும் மறந்துபோய் ஒரு புதிய வாழ்க்கையிலேயே லயித்துப் போகாமல், தன்னுடைய மக்களும் தன்னைப் போலவே முன்னேற உதவி செய்ய வேண்டும். இது போன்ற தூண்டுதல்களைச் செய்ய நான் மறுபடியும் மறுபடியும் அங்கு போவேன். ரேவதியும் இதைத்தான் சொல்லியிருக்கிறார்."

"பொதுவாகவே நீங்கள் வோட்டுக் கேட்கச் சென்ற இடங்களில் உங்களை ஓர் அரசியல்வாதியாகப் பார்த்தார்களா; அல்லது ஒரு நடிகையாகத்தான் பார்த்தார்களா?"

"குடிநீர் போன்ற அடிப்படைப் பிரச்னைகள் கூட தீர்க்கப் படாத நிலையே இன்னமும் இருப்பதால் ஓர் அரசியல்வாதியிடம் கோபப்படுவதைப் போல்தான் எங்களிடமும் கோபப்

**நடிகை ரோகிணி என்று சொல்வதைவிட, ரோகிணி என்ற பெண் நடிகையாக இருக்கிறார் என்று சொல்வதுதான் சரியானதாக இருக்கும். நாம் அவரைச் சந்தித்தபோது, சினிமாவின் கனவுருவத்தைத் தம்மீது சுமந்து கொண்டு பேசாமல், நமது பக்கத்து வீட்டுப் பெண்ணைப் போலவே ரொம்பவும் இயல்பாகப் பேசினார்; வெளிப்படையாகப் பேசினார்...**

பட்டார்கள். முதலில் அவர்களுடைய கோபத்தை சமாதானப்படுத்த வேண்டியதாயிற்று. நடிகை என்கிற அளவில் ஏற்கெனவே எங்கள் முகங்கள் அறிமுகமானதாக இருந்ததால் அவர்கள் கோபம் அடங்கியதும் எங்களை வீட்டுக்குள் அழைத்து உட்காரச் சொல்லி உபசரித்தார்கள். அதோடு, நாங்கள் மற்ற கட்சிக்காரர்களைப் போல், எதிர்க்கட்சிக்காரர்களைக் குற்றம் சொல்லி, வோட்டுக் கேட்கவில்லை; ரேவதி ஜெயித்தால் என்னவெல்லாம் செய்வோம் என்பதை மட்டுமே சொல்லிக் கேட்டோம். இது மக்களுக்கு மிகவும் பிடித்திருந்தது. ரேவதி இந்தத் தேர்தலில் போட்டியிட்டதன் மூலம்- நாங்கள் அவருக்காக வோட்டுக் கேட்டதன் மூலம் ஒரு நல்ல விஷயத்துக்கான துவக்கத்தை ஆரம்பித்து வைத்திருக்கிறோம் என்கிற அளவில் எங்களுக்கு வெற்றியே!"

"சரி, சினிமாவுக்கு வருவோம். நீங்கள் எந்தப் படத்திலும் கவர்ச்சியாக நடித்ததில்லை. அதனாலேயே நீங்கள் மக்கள் மத்தியில் பரபரப்பாகப் பேசப்படும் ஒரு நடிகையாக இல்லாமல் போய்விட்டீர்களோ?"

"நிஜம்தான். ஆனாலும் அது குறித்து எனக்கு எந்தவிதமான வருத்தமும் இல்லை."

"ஏன்?"

"ஜெயா பச்சன் அளவுக்கு, அவர்காலத்தில் கவர்ச்சி காட்டிய நடிகைகள் இன்று பேசப்படுவதில்லையே! இப்படி நிறையச் சொல்ல முடியும்."

"இன்றைய சினிமாவில் கவர்ச்சி என்பது ஒரு முக்கிய அம்சமாகி விட்டது..."

"இருக்கலாம். நான் அப்படி நடிக்காததற்கு இரண்டு காரணங்கள். ஒன்று, கவர்ச்சி காட்டுகிற அளவுக்கு என் உடல்வாகு இல்லை என்பது. இரண்டாவது கவர்ச்சி காட்ட வேண்டும் என்கிற மனோநிலையில் நான் வளராதது!"

"பின் எப்படி வளர்ந்தீர்கள்?"

"எனது நடிப்புக்கு அடித்



# வென்றார்!

எத்தனை வேகம்! எத்தனை உற்சாகம்! சுருக்-நறுக் போட்டிகளில் கலந்து கொண்டு வாராவாரம் ஆயிரக் கணக்கான வாசகர்கள் எழுதிக் குவித்த சொல்லோவியங்களைக் குறிப்பிடுகிறோம்.

இருபத்தாறு வாரங்கள் நடந்த போட்டியில் அதிகபட்சமாக பத்து வாரங்கள் இடம் பிடித்து, ஒரு ஜோடி மின்னும் டைடன் கடிகாரங்களைப் பரிசாகப் பெறும் வாசகர்:

எல். சண்முகசுந்தரி,
ஸ்டேட் பாங்க் ஆஃப் இந்தியா,
இராமநாதபுரம் - 623 501.

சண்முக சுந்தரிக்கு நம் பாராட்டுக்கள். கலந்து கொண்டு சிறப்பித்த ஆயிரக்கணக்கான வாசகர்களுக்கு நன்றி.

-ஆர்.

---

தளம் போடப்பட்டதே மலையாள சினிமாக்களில்தான். அங்கே பரதன், பத்மராஜன், ஐ.வி. சசி, பாலசந்திரமேனன் போன்ற டைரக்டர்களோடும் நெடுமுடிவேணு, திலகன், மோகன்லால் போன்ற நடிகர்களோடும் நான் பணியாற்றிய காரணத்தால், கவர்ச்சி காட்டுவது என்கிற விஷயத்தையே கவனத்தில் கொள்ளாமல், அதே சமயம் ஒரு நடிகையாகவும் வளர்ந்து விட்டேன். அதோடு நான் வளர்ந்த எனது குடும்பச் சூழ்நிலையும் எனது ஆழ்மனத்தில் பதிந்து, கவர்ச்சி காட்டி நடிக்கக் கூடாது என்கிற மனோநிலையை எனக்கு உண்டாக்கியிருக்கும் என்று கருதுகிறேன். எப்படியிருந்தாலும் நல்ல படங்களில் நடிக்கிறேன்- நல்ல கேரக்டர்களில் நடிக்கிறேன்- இதன் மூலம் நானும் சில சமயங்களில் பரபரப்பாகப் பேசப்படுகிறேன் என்கிற அளவில் திருப்தியாகத்தான் இருக்கிறேன்."

"மகளிர் மட்டும் என்கிற படம் 'நைன் டு ஃபைவ்' என்கிற ஆங்கிலப் படத்தின் அப்பட்டமான காப்பி என்று சொல்கிறார்கள். இப்படிப்பட்ட படங்களில் உங்களைப் போன்றவர்கள் நடிக்கிறபோது, உங்களுக்கென்று இருக்கிற நல்ல பெயருக்குக் களங்கம் ஏற்படாதா?"

"நானும் 'நைன் டு ஃபைவ்' படம் பார்த்தேன். 'மகளிர் மட்டும்' நடிக்கிறபோது அல்ல; படம் பண்ணிய பிறகு. நிச்சயமாக 'மகளிர் மட்டும்' அந்தப் படத்தின் அப்பட்டமான காப்பி அல்ல. மூன்று வர்க்கங்களைச் சேர்ந்த மூன்று பெண்கள் ஒன்று சேர்ந்து, தங்களுக்குப் பொதுவாக உள்ள ஒரு விஷயத்துக்காகப் போராடுகிறார்கள் என்கிற விஷயத்தை மட்டும்தான் அந்தப் படத்திலிருந்து எடுத்துக் கொண்டு 'மகளிர் மட்டும்' செய்யப்பட்டிருக்கிறது. இது முழுக்க முழுக்க நமது சூழ்நிலைகளுக்கும் தன்மைகளுக்கும் ஏற்ப செய்யப்பட்டிருக்கிறது. இந்த விஷயம் சுமார் இருபது சதம் சினிமா ரசிகர்களுக்கு வேண்டுமானால் தெரிந்திருக்கலாம். மீதி எண்பது சதம் பேருக்கு இது சுத்தமாகவே தெரியாது. ஆக, ஒரு நல்ல விஷயம், 'நைன் டு ஃபைவ்' பார்க்காத- அது பற்றிக் கேள்விப்படாத எண்பது சதம் பேருக்கு 'மகளிர் மட்டும்' மூலமாகத்தான் தெரிவிக்கப் பட்டிருக்கிறது. எனவே, அதில் நடித்ததால் எந்தவிதமான பாதிப்பும் எனக்கோ மற்றவர்களுக்கோ ஏற்பட்டிருப்பதாகச் சொல்ல முடியாது என்பதே என் எண்ணம்."

"இப்போது வெளி வருகிற தமிழ்ப் படங்கள் எல்லாமே கதாநாயகனுக்கு முக்கியத்துவம் கொடுத்து வரும் படங்களாகத்தான் இருக்கின்றனவே தவிர, கதாநாயகிக்கு முக்கியத்துவம் கொடுக்கிற படங்களாக இல்லையே!"

"தமிழில் மட்டுமல்ல; எல்லா மொழிப் படங்களுமே அப்படித்தான்!"

"தெலுங்கில் விஜயசாந்தியை மையமாக வைத்துப் பல படங்கள் வருகின்றன!"

"விஜயசாந்தியை வைத்து எடுக்கப்படுகிற படங்கள் எல்லாமே வெறும் வியாபார நோக்கத்துக்காக எடுக்கப்படுகிற படங்கள் தானே தவிர, பெண்ணை உயர்த்திக் காட்ட வேண்டும் என்பதற்காக எடுக்கப்படுகிற படங்கள் அல்ல. டைரக்டர் கிருஷ்ணா எடுத்த வைஜெயந்தி ஐ.பி.எஸ். மாத்திரம்தான் பெண்ணை உயர்த்திக்காட்டுவதற்காக எடுக்கப்பட்ட படம். காரணம், டைரக்டர் கிருஷ்ணா அப்படிப்பட்ட படங்களை எடுப்பவர். அவர் இப்போது இறந்து விட்டார். அவர் எடுத்த வைஜெயந்தி ஐ.பி.எஸ். படத்தில்தான் விஜயசாந்தி ஒரு பெரும் நடிகை

யாகப் பிரபலமானார். அந்தப் பிரபலத்தை மற்றவர்கள் வியாபார நோக்கில் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள், அவ்வளவுதான். மற்றபடி தமிழில் என்று எடுத்துக் கொண்டால், டைரக்டர் பாரதிராஜா எடுக்கும் படங்களி லெல்லாம் கதாநாயகிகளுக்கும் வெகுவாக முக்கியத்துவம் தந்துதான் எடுக்கிறார்."

"ஒரு பெண் என்கிற முறையில், அப்படிப் பட்ட படங்கள் ஏன் வருவதில்லை என்று நீங்கள் யோசித்ததில்லையா?"

"இல்லை. ஏனோ இப்படியொரு கோணத் தில் இதுவரை எனக்கு யோசிக்கத் தோன்ற வில்லை!"

"அப்படி யோசிக்கிறபோது, வருத்தமும் கவலையும் ஏற்படுமில்லையா?"

"ம்... கண்டிப்பாக. இந்த விஷயத்தில் மாத் திரமல்ல; எந்த விஷயமானாலும் இப்போ திருக்கிற நிலை பற்றிய வருத்தமும் கவலையும் பலருக்கும் ஏற்படுகிற போதுதான் நல்ல விஷ யங்களும் புதுமையான விஷயங்களும் உரு வாக்கப்படும்."

"நமது சினிமாக்களில் வன்முறை என்பது அதிகமாக இருக்கிறது. அது நமது இளைஞர் களின் மனத்திலும் வன்முறையை வளர்க்கிறது என்று சொல்லலாமா?"

"நிஜ வாழ்க்கையில்தான் மிக மோசமான வன்முறை இருப்பதாக உணர்கிறேன். சமீ பத்தில் ஒரு செய்தி படித்தேன். அஸ்ஸாம் மாநிலத்தில் எங்கோ ஒரு சிறு கிராமம். அங்கு இன்னமும் ஜாதி வித்தியாசம் கோலோச்சுகிற நிலையில், ஒரு கீழ் ஜாதிப் பையனும் ஒரு மேல் ஜாதிப் பெண்ணும் காதலிக்கிறார்கள். தங்கள் திருமணத்துக்குப் பெற்றோர் ஒப்புக் கொள்ள மாட்டார்கள் என்கிற காரணத்தால் இருவரும் சேர்ந்து வெளியூருக்கு ஓடிப் போகப் புறப்படுகிறார்கள். அவர்களைப் பிடித்த கிராம மக்கள், அந்தப் பெண்ணை ஏதும் செய்யவில்லை. அந்தக் கீழ் ஜாதிப் பையனைப் பிடித்து, தலைகீழாகக் கட்டித் தொங்க விட்டு, தலையைத் துண்டித்திருக்கிறார்கள். இது எத்தனை பெரிய கொடூரம்! இதுபோலவா சினிமாவில் காட்டுகிறார்கள்?"

"இதை வேறு காட்ட வேண்டுமா? ஆனா லும் சினிமாக்களில் கொடூரமான வன்முறை கள் காட்டப்படுகின்றன...."

"உண்மைதான். வியாபார நோக்கில் காட் டத்தான் செய்கிறார்கள். ஜெண்டில்மேன் படத்தில் அந்த அளவுக்குக் காட்டப்பட்டிருக்க வேண்டுமா என்று நானும் யோசித்தேன். அதற்கு சினிமாக்காரர்களை மாத்திரம் குற்றம் சொல்லிவிட முடியாது. சென்சாரில் என்ன செய்கிறார்கள்? அவர்கள் அனுமதி மறுக்க லாமே! சென்சாரின் அளவுகோல்கள் புரிவதே யில்லை. ஒரு படத்தில் அனுமதிப்பதை - இன் னொரு படத்தில்- இன்னொரு மொழியில் அனுமதிக்க மறுக்கிறார்கள். அவர்கள் முழுமை யான சமூக அக்கறையோடு செயல்பட்டால் பெருமளவு குறைக்க முடியும் என்று நினைக் கிறேன்."

"நல்லது. பொதுவான ஒரு விஷயத்துக்கு வருவோம். சாதாரணமாக நல்லவர்கள், கெட்ட வர்கள் என்பதெல்லாம் எல்லா இடங்களிலும் தொழில்களிலும் இருக்கத்தான் செய்கிறார்கள். ஆனாலும் சினிமாக்காரர்கள் என்றாலே அவர்கள் நடத்தையை சந்தேகத்துக்குரியதாகத் தான் இந்தச் சமூகம் பார்க்கிறது. இதற்கு என்ன காரணம்?"

"நீங்கள்தான் காரணம்!"

"நானா?"

"பத்திரிகைக்காரர்களைச் சொல்கிறேன். ஐந்து சதம் மோசமானவர்கள் என்பது எல்லாத் தொழில்களிலும் இருப்பதுதான். ஆயினும் சினிமாக்காரர்களைப் பற்றித்தான் பத்திரிகை கள் வியாபாரம் கருதி எழுதுகின்றன..."

"ஏன், டைப்பிஸ்ட் - மானேஜர், டாக்டர்- நர்ஸ் போன்றவர்களைச் சம்பந்தப்படுத்திக் கூடத்தான் இன்னும் ஜோக்குகள் போட்டுக் கொண்டிருக்கிறார்கள்..."

"ஆனால் அதெல்லாம் பொதுப்படையாகப் போடப்படுகின்ற விஷயங்கள். குறிப்பிட்ட பெயர்களைச் சொல்லி- யாரையும் அடை யாளங்காட்டி எழுதப்படுவதில்லை. சினிமா வில்தான் அப்படி எழுதுகிறார்கள். அந்த நடிகையும் அந்த நடிகரும் மேக்கப் ரூமுக்குள் போய் கதவைச் சாத்திக் கொண்டார்கள் என் றெல்லாம் எழுதுகிறார்கள். சொல்லப் போனால், சாதாரணப் பெண்களை விடவும் நாங்கள் ஜாக்கிரதையாகத்தான் - பயந்து பயந்துதான் நடந்து கொள்கிறோம். பள்ளிகளில் படிக்கும் பெண்கள் தங்கள் சக மாணவர் களோடு பேசுகிறார்கள். கல்லூரி மாணவிகள் சக மாணவர்களோடு பேசுகிறார்கள். ஹோட்டலுக்குச் சென்று சாப்பிடுகிறார்கள். அதுபோல்தான் நாங்களும் சக நடிகர்களோடு பேசித்தான் ஆக வேண்டும். ஆனால் மீடியாக் கள் எப்போதும் எங்கள்மீதே கவனம் செலுத்தி

---

"தேர்தலில் போட்டியிட்டு தோற்று விட்டாலும் உங்களால் எப்படி மகிழ்ச்சியோடு இருக்க முடிகிறது?"

"தேர்தல் செலவுக்கு மேலிடம் கொடுத்த பத்துலட்சம் பணத்தில் ஏழரை லட்சம் மிச்சம் பிடிச்சு பதுக்கி வைச்சிருக்கேனே..."

— ஆர். பிரகாசம்



எதையாவது எழுதுவதால்தான் அப்படியொரு நிலை உருவாகியிருப்பதாகச் சொல்வேன். அதே சமயத்தில் சிலரின் நடவடிக்கைகள் சரியாக இருப்பதில்லை' என்பதையும் ஒப்புக் கொள்கிறேன்."

"உங்கள் பக்கத்து வீடுகளில் உள்ளவர்கள் உங்களிடம் எப்படிப் பழகுகிறார்கள்? பக்கத்து வீட்டுக்காரி என்கிற சிநேகிதத்தோடு பழகுகிறார்களா அல்லது ஒரு நடிகை என்று கொஞ்சம் ஒதுங்கி நின்றே பழகுகிறார்களா?"

"இது பற்றி நான் சரியான பதிலைச் சொல்ல முடியாது. ஏனெனில், பாங்க் போவது முதல் எனக்கான ஆடிடிங்வரை எல்லாவற்றையும் நானே கவனித்துக் கொள்வதால் அண்டை அயலாரிடம் பழகுவதற்கான நேரம் எனக்குக் கிடைப்பதில்லை!"

"வீணை இருக்கிறது. வாசிப்பீர்களா?"

"கற்றுக் கொண்டிருக்கிறேன். வாய்ப்பாட்டும் கற்றுக் கொண்டிருக்கிறேன்."

"படிப்பதுண்டா?"

"உண்டு. ஆனால் இலக்கியம் பற்றியெல்லாம் பேசுகிற அளவுக்கு இன்னும் நான் படித்து அறிந்து கொள்ளவில்லை. எனது தாய் மொழி தெலுங்கு என்றாலும் ஐந்து வயதிலிருந்தே சென்னையில்தான் வளர்ந்தேன் என்பதால் தமிழில் எனக்கு ஆர்வம் அதிகம். பொதுவாகவே எனக்கு மொழிகள் மேல் ஆர்வம் உண்டு என்பதால், மலையாளம், கன்னடம், ஹிந்தி மொழிகளில் கூட எனக்கு எழுதப் படிக்கத் தெரியும்."

"தமிழில் என்னென்ன புத்தகங்கள் படித்திருக்கிறீர்கள்?"

"நான் முதலில் படிக்க ஆரம்பித்தது, கல்கியின் பொன்னியின் செல்வன், சிவகாமியின் சபதம்தான். பிறகு சின்னச் சின்ன கவிதைகள் படிக்க ஆரம்பித்தேன். சுஜாதாவின் சில புத்தகங்கள் படித்தேன். பிறகு, தி.ஜானகிராமனின் மோகமுள் படிக்க ஆரம்பித்தபோது எனக்கு அது அவ்வளவாகப் புரியவில்லை. அப்புறம்தான் லா.ச.ராவின் அபிதா படித்தேன்."

"உங்களுக்கு என்ன வயது?"

"இருபத்தேழு."

"அப்படியுமா மோகமுள் புரியவில்லை?"

"முன்பு எனக்குப் புரியவில்லை. இப்போது எனக்குப் புரியலாம். மறுபடி படிக்க ஆரம்பிக்க வேண்டும்."

"பெண் விடுதலை– ஆணாதிக்கம் பற்றியெல்லாம் நீங்கள் நிறையப் பேசுவீர்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்... உண்மை தானா?"

"குறிப்பாக எனது கருத்தைக் கேட்கிற போதுதான் நான் சொல்வேனே தவிர, நானாக எனது கருத்துக்களை மற்றவர்கள் மேல் திணிக்க மாட்டேன். இதுவரை நான் ஏதாவது உங்களிடம் பேசினேனா என்ன?"

"உங்கள் கருத்தைத்தான் கேட்கிறேன்..."

"குடும்பம் என்பது ஒரு சமூக அமைப்பு. அமைப்பு என்றாலே நல்லது கெட்டது என்று இரண்டுமே இருக்கத்தான் செய்யும். இதை முதலில் உணர்வது அவசியம். கணவன் - மனைவிக்குள் நீயா நானா என்கிற மனோ நிலை வளர்வது ஆபத்தானது. நாம் என்கிற மனோ நிலைதான் வளர வேண்டும். விட்டுக் கொடுக்க வேண்டியதற்கு விட்டுக் கொடுக்க வேண்டும்; பணிந்து போக வேண்டியதற்குப் பணிந்து போக வேண்டும். அதே சமயத்தில் தனித்துவமும் இருக்க வேண்டும். நான் சொல்வது இருவருக்குமே பொதுவான விஷயங்கள்."

"வேலைக்குப் போகிற கணவன்-மனைவி இருக்கிற குடும்பத்தில் குடும்பவேலைகளைப் பெண் மட்டும்தான் செய்ய வேண்டியிருக்கிறது. வெளியில் வேலைக்குப் போகிற சுதந்தரம் இருந்தாலும் அதுவொரு கூடுதல் வேலைப்பளுவாகி விடுகிறது..."

"சில சோம்பேறிக் கணவன்மார்கள் மனைவிக்கு உதவி செய்வதில்லை என்பது உண்மைதான் என்றாலும் இன்றைக்கு நிலைமைகள் மாறிக் கொண்டு வருகின்றன. எனது பெற்றோரே எனக்குக் காட்டிய கண்டிப்பை-என் அண்ணன்மார்களுக்கும் எனக்கும் காட்டிய வித்தியாசத்தை இப்போது எனது தம்பிக்கும் தங்கைகளுக்கும் காட்டுவதில்லை. அந்த வகையில் சந்தோஷம்தான்."

"உங்கள் குழந்தைகளை நீங்கள் எப்படி வளர்ப்பீர்கள்?"

"இந்த நகர வாழ்க்கை மட்டுமே வாழ்க்கை அல்ல என்பதை முதலில் உணர வைப்பேன். நமது பண்பாடு, கலாசாரம், சரித்திரம் இதெல்லாம் எப்படிப்பட்டது என்பதைப் புரிய வைப்பேன். நமது கிராமங்களின் தூய்மையையும் அழகையும் பார்க்கச் செய்வேன். அதே சமயத்தில் அதன் வறுமையையும் உணரச் செய்வேன். சுற்றுச் சூழலின் அவசியத்தையும் புரிய வைப்பேன். வாழ்க்கை என்பது வசதியாக வாழ்வது மாத்திரமல்ல; நல்லவர்களாகவும் பிறருக்கு முடிந்தவரை உதவுபவர்களாகவும் வாழ்வதுதான் என்று கற்பிப்பேன்."

"தற்போது எத்தனை படங்களில் நடித்துக் கொண்டிருக்கிறீர்கள்?"

"தற்சமயம் தமிழில் எதுவும் இல்லை. மலையாளத்தில் ஒரு படம் என்.எஃப்.டி.சி.க்காகச் செய்ய இருக்கிறேன், வரும் ஜூலையிலிருந்து."

"டெலிவிஷன் சீரியல்கள்?"

"பெரும்பாலும் ஒப்புக் கொள்வதில்லை என்றாலும் நல்ல கதையம்சம், கேரக்டர் என்றால் மாத்திரமே டெலிவிஷன் சீரியல்களில் நடிக்கச் சம்மதிக்கிறேன். அந்த வகையில் இப்போது இரண்டு சீரியல்களில் நடித்துக் கொண்டிருக்கிறேன்."

சந்திப்பு : **இளங்கோவன்**

அட்டை வண்ணப்படம், படம் : **யோகா**

# KALKI SHOPPING PAGE

**மணமக்கள் தேவை**
**இலவச சேவை**

அனைத்து சமூகத்திலும், ஆயிரக்கணக்கான வரன்கள் பெற உடன் பதிவுசெய்ய தொடர்பு கொள்ளவும்.



## BEST BRIDE & GROOM BANK™

H.O.: 3rd Floor, Shanthi Complex,
26, Ranganathan Street,
Madras - 600 017.
Phone : 4348560 4347025

B.O.: 13, College Road,
Nanganallur, Madras - 114.
7, Station Road, Tambaram
Sanatorium,
Madras - 600 047.
5, Second Main Road,
New Colony,
Chromepet,
Madras - 600 044.

**Working on Sundays also**

---

FOR THE LOVERS OF SUNGUDI SAREES

A FINEST SUNGUDI SAREE OFFERED TO OUR CUSTOMERS PAY A VISIT AND SEE THE COOL AND COMFORT OF

## SAKUNTHALA SAREES

ALSO AVAILABLE

- RANI SAREES
- BENGAL COTTON SAREES
- BENGAL PRINTED PURE SILKS
- BATIK COTTON SAREES
- CHUDDIDAR MATERIALS (FINE & COLOURFUL BATIK DESIGNS)

## MADURAI TEXTILES

2, SIVAPRAKASAM ROAD,
PONDY BAZAAR, MADRAS - 600 017

---



## ஓம் சரவணபவ பெனிபிட் பண்டு லிமிடெட்



பதிவு அலுவலகம் : வேணுகோபால் பில்டிங், 26, ஈவினிங் பஜார்,
சென்னை - 600 003. (பாய் கடை பஸ் ஸ்டாப்)
பதிவு எண் : 18-27360/94 (மத்திய அரசு அங்கீகாரம் பெற்ற கம்பெனி)

☎ 5355296

**டெபாசிட்டுகள் ரூ 2 கோடியை தாண்டியுள்ளதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.**

பிக்சட் டிபாசிட்டுகளுக்கு கவர்ச்சிகரமான வட்டிகள் வழங்கப்படும்
வட்டிக்கான காசோலைகள் முன்கூட்டியே வழங்கப்படும்
மேலும் பயனுள்ள திட்டங்களுக்கு நேரில் அணுகவும்

**சென்னை மாநகர சொத்துக்கள் மீது கடன் கிடைக்கும்**





**நகைக்கடன் கிராம் 1க்கு ரூ. 300 மாதவட்டி ரூ. 1.95 மட்டும் வேறு கட்டணம் இல்லை**

வெள்ளி விடுமுறை

உச்சவரம்பு கிடையாது
உறுப்பினராகி பயன் பெறுவீர்

**வேலை நேரம் : காலை : 8.30 - 12.30 மாலை : 2.00 - 6.00**



சேர்மன் : P. பாலசுப்பிரமணியம், B.Sc.,
முதன்மை அறங்காவலர்,
ஸ்ரீ கந்தகோட்டம், சென்னை - 600 003.

PB குருப் கம்பெனி

அருளுக்கும் ஓம் சரவணபவ! பொருளுக்கும் ஓம் சரவணபவ!

# குறையொன்று

**கல்கி**
**19.5.96**
**இதழில்**
**ஆரம்பம்!**

மெய்சிலிர்க்க
வைத்த முக்கூர்
பிரசங்கங்களின்
அரிய
தொகுப்பு!



# ல்லை...

ஒவ்வொரு
வாரமும்
நீங்கள்
பிரித்தெடுத்து
சேர்த்து வைக்க
வசதியாக
இந்த
நடுப்பக்கங்களில்
இடம் பெறும்



**முக்கூர்
லக்ஷ்மி நரசிம்மாச்சாரியார்**

*வழங்கும்*

**வாழ்க்கைக்குத்
தேவையான
வழிகாட்டல் தொடர்.**





அபஸ்வரம் ராம்ஜி, ராஜ் டீ.வி.யில் நடத்தும் 'பயோடேட்டா' நிகழ்ச்சிக்கு ஒரு வயசு முடிந்திருக்கிறது. வாரம் தோறும் தாம் சந்தித்த பிரமுகர்களில் மறக்க முடியாதவர்களை இங்கே நினைவு கூர்கிறார் ராம்ஜி :

பயோடேட்டாவுக்கே திருப்புமுனையாக அமைந்தது, கமல் பற்றிய நிகழ்ச்சி தான். வழக்கம் போல ஒரு செட் போட்டு நிகழ்ச்சி நடத்தாமல், ஃபிலிம் சிட்டியில், புல்வெளியில் டின்னர் சாப்பிட்டபடியே கமலிடம் கேள்விகள் கேட்டோம். சுமார் இருபது பேர் நிகழ்ச்சியில் கலந்து கொண்டார்கள். அவர்களில்

# கொஞ்சம் படிச்ச குள்ளன்!

• குன்னக்குடி :
குடை கொண்டு போனீர்களா?

• அமுதா





கமலின் குடும்ப டாக்டர் ஒரு கேள்வி கேட்டார் பாருங்கள்... சிரிப்பு பொத்துக் கொண்டு வந்து விட்டது.

"கமல், உங்களுக்குத் தலைவலி எப்ப வரும்; முதுகுவலி எப்ப வரும், கால்வலி எப்ப வரும்னு எனக்குத் தெரியும். உங்க மருத நாயகம் எப்ப வரும்னு தெரியலையே!"

பணப்பற்றாக்குறை தான் தாமதத்துக்குக் காரணம் என்று கமல் சொன்னார். அந்த மெகா பட்ஜெட் படத்துக்கு யாராவது என் ஆர்.ஐ. நண்பர்கள் உதவி செய்தால் உடனே தொடங்கிவிடத் தயார் என்று கமல் சொன்னார்.

'ஆவி உலகம்' புகழ் அமுதாவை முதல் முதலில் டீ.வி. மூலம் அறிமுகப்படுத்தியது நான்தான். ஒரு சாதாரண டிரைவரின் மகளாக இருந்த அமுதா, இந்த நிகழ்ச்சி மூலம் புகழின் உச்சிக்கே போய் விட்டார்! கடைகள் திறப்பு விழா, ஆண்டு விழா என்று எல்லாவற்றுக்கும் அவரைக் கூப்பிடத் தொடங்கி, இன்று அவர் ஒரு வி.ஐ.பி. ஆகிவிட்டதில் எனக்குப் பிரத்யேக சந்தோஷம்! அமுதா ஒரு ஆச்சர்யமான பர்சனாலிட்டி.

யாகவா முனிவரை பேட்டி கண்டது மறக்க முடியாத விஷயம். மிகவும் புதிரான அவர், பழகுவதற்கு மிக இனிமையானவர். நான் பாட்டுக்கு இடக்காக, இண்டலாகக் கேள்விகள் கேட்க, "நீர் மெத்தப் படித்த கள்ளன்" என்றார் அவர். நான், "இல்லை- நான் கொஞ்சம் படித்த குள்ளன்" என்றதும் யாகவா முனிவரே சிரித்து விட்டார்.

அடுத்து, நம்புங்கள் நாராயணன். அவர் ஒரு mind reading ஜீனியஸ். ஐந்து, நான்கு, மூன்று, இரண்டு, ஒரு இலக்க எண்களை, நிகழ்ச்சியில் பங்கேற்றவர்கள் சொல்ல, நான் கரும்பலகையில் எழுதினேன். எழுதி முடித்ததும் அவர் வீட்டுக்கு போன் செய்து, அவர் மகளை ஓர் ஐந்து இலக்க எண்ணைச் சொல்லச் சொன்னேன்.

அவர் மகள் சொன்ன எண், ஏற்கெனவே நான் போர்டில் எழுதியிருந்த எண்தான்! கண்ணை மூடியபடி ஷூட்டிங்கில் அமர்ந்திருந்தார் நாராயணன். மூடிய கண்ணைத் திறக்காமலே, எழுதியிருந்த அத்தனை எண்களையும் அவர் சொல்ல, சொல்ல அசந்து போனோம்!

டாக்டர் சாலமன் விக்டர், மூவாயிரம் ஓப்பன் ஹார்ட் சர்ஜரி செய்த பெரிய மருத்துவர். அவர் பங்கு கொண்ட நிகழ்ச்சியில் ஒருவர் இசகு பிசகாகக் கேள்வி கேட்டார்:

"டாக்டர்... நம் உடலின் ஒவ்வொரு உறுப்புக்கும் கட்டளை இடுவது மூளைதான். காதலிப்பது கூட மூளையின் உத்தரவால்தான். அப்புறம் ஏன் இதயத்தை, காதல் சின்னமாகக் குறிப்பிடுகிறார்கள்?"

டாக்டரின் பதில்: "காதலிக்க மூளை உத்தரவிட்டாலும் செயல் படுத்துவது இதயம்தான். அதுதானே அதிகம் துடிக்கிறது!"

குறும்புத்தனமாகக் கேள்வி கேட்டுச் சிலரை தர்ம சங்கடத்துக்கு உள்ளாக்கினேன், இந்நிகழ்ச்சியில்.

குறிப்பாக நாடி ஜோதிடர் குமார் குருஜி மற்றும் வயலின் குன்னக்குடி. குமார் குருஜி, "1999ல் காவிரிப் படுகையில் பெட்ரோல் கிடைக்கும்" என்றபோது, "அதுசரி, எப்போது காவிரியில் தண்ணீர் கிடைக்கும்?" என்று கேட்டேன். சிரித்து விட்டார்கள்.

அதேபோல, குன்னக் குடி வைத்தியநாதன், வயலின் வாசித்து மழை வரவைத்ததாகச் சொன்னபோது, நான் இப்படிக் கேட்டேன்:

"மழை நிச்சயம் வரும் என்று நம்பிக்கை இருந்ததா உங்களுக்கு?"

"ரொம்ப இருந்தது."

"கையில் குடை எடுத்துப் போயிருந்தீர்களா?"

"இல்லை."

"நிச்சயம் மழை வரும் என்று நம்பிய நீங்கள், குடை எடுத்துப் போகாதது ஏன்?"

தொகுப்பு : **எஸ். சந்திரமௌலி**


• ராம்ஜி

# KALKI SHOPPING PAGE

## மணமக்கள் தேவை
## கம்ப்யூட்டர் ஜாதகம்

அனைத்துசமூகத்திலும், ஆயிரக்கணக் கான வரன்கள் பெற உடன் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும்.

கம்ப்யூட்டர் ஜாதகங்கள் நொடிப் பொழுதில்

| | |
|---|---|
| ஆங்கிலம், தமிழ் | ரூ. 50/- |
| எதிர்கால கணிப்புடன் | ரூ. 150/- |
| ஆண்டு பலன் : | ரூ. 50/- |
| கல்யாண பொருத்தம் : | ரூ. 50/- |
| NUMEROLOGY PREDICTIONS | Rs. 50/- |

**CONSULT DIVINE ASTROLOGER**
**THETIYUR V MAHADEVAN**
**WITH PRIOR APPOINTMENT.**

**ASTROLOGY SOFTWARE FOR SALE**

## ஸ்வயம்வராலயா

(GOVT. REGD)

18. ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை – 33. போன் : 425822, 4846427

7–ஏ, சாந்தி விஹார் காம்ப்ளக்ஸ், லஸ், சென்னை – 4. போன்:846278,

88, 1, 16th Cross, 6th Main, Malleswaram, Bangalore - 560 055. Ph.:3340146

**FRANCHISE / AGENTS WANTED**

## தவணை முறையில்
## சாரிகள் விற்பனைக்கு

புதிய டிசைன்களில் சூரத் சாரிகள், பெங்கால் காட்டன், காஞ்சிபுரம் பட்டு, மைசூர் சில்க், கோரா காட்டன், சுங்குடி சேலைகள் மற்றும் சுடிதார், பிளவ்ஸ் ஆகிய அனைத்தும் மொத்த வியாபாரிகளும், தனி நபர்களும், பணிபுரியும் பெண்களும் எங்களிடம் தவணை முறையில் வாங்கிக் கொள்ளலாம். மேலும் விவரங்களுக்கு :

## மீரா டெக்ஸ்டைல்ஸ்

26/1, மோதிலால் தெரு,
தி. நகர், சென்னை – 17.
போன் : 4342696




**ESTD : 1955** ஸ்ரீ **Ph : 24823**

### 30 To 33 நாட்கள் கொண்ட இமாலய
### பத்ரிநாத், கேதார்நாத், நேபாள், பசுபதிநாத்
### 41-வது வருட காசியாத்திரை ஸ்பெஷல்

*14.7.96 ம் தேதி அன்று சென்னையிலிருந்து நித்திரை வசதி கொண்ட* 3 **Tier Sleeper** *கேரேஜ் புறப்படுகிறது.*

யாத்திரை மார்க்கம் சென்னை, சோலாப்பூர் பண்டரீபுரம், பம்பாய், ஆக்ரா, மதுரா, அலகாபாத், அயோத்யா, ஸ்ரீகாசி, நேபாள், காத்மாண்ட், கயா, கல்கத்தா, பூரி, ஜெகந்நாதம், விஜயவாடா வழியாகச் சென்னை வந்து சேருகிறது.

2-ம் வகுப்பு ரயில் டிக்கெட் முழு பர்த் வசதி, காலை டிபன், மாலை 2 வேளை போஜனம், ரயில் கேரேஜிலேயே தங்கும் வசதி கட்டணம் உள்பட நபருக்கு ரூ. 7775/- பத்ரிநாத், கேதார்நாத் நேபாள் யாத்திரைக்கு பஸ் சார்ஜ் ரூ. 2750, தனி நபருக்கு ரூ. 2000 வீதம் அட்வான்ஸ் தொகையை செலுத்தி ரிசர்வ் செய்து கொள்ள வேண்டும்.

எமது யாத்திரையில், அருப்புக் கோட்டை திரு. A.T. ராஜன் குடும்பத்தாரும், உறவினர்களும் தேனி திரு. கனிபாண்டியன் – வள்ளியம்மாள் தம்பதியர் போடி. திரு. T. மவுனகுருசாமி தம்பதியர், புதுவை. திரு. R. புருஷோத்தம நாயுடு சந்திரா அம்மாள் தம்பதியர், ஸ்ரீரங்கம் தனலட்சுமி, திருச்சி அண்ணா நகர், திரு. K. ராமலிங்கம் தம்பதியர், பொளுர் திரு. K.R. ராஜகோபாலசெட்டியார், சாந்தி தம்பதியர், தியாகதுருகம் திரு. மீனாட்சி சுந்தரம், அரியலூர், கோவிந்தசாமி, அருணாசலம் முதலானோர்கள் சேர்ந்துள்ளார்கள். உங்கள் டிக்கெட்டுகளையும் முன்கூட்டியே பதிவுசெய்து கொள்வது நலம்.

20 நாட்கள் கொண்ட பத்ரி கேதார், நேபாள், காசி யாத்திரை 19.9.96-ம் தேதி சென்னையிலிருந்து தனி 3 டயர் கேரேஜ் மூலம் புறப்படுகிறது. நபருக்கு கட்டணம் ரூ. 5975. பத்ரி கேதார் - நேபாள் கட்டணம் ரூ. 2750/- தனி.

விவரத்திற்கு ரூ. 2 ஸ்டாம்ப் அனுப்பி, முழு விவரங்கள் பெறலாம்.

## ஸ்ரீநாமகிரி டிராவெல் சர்வீஸ்,

34-A/2 அக்ரஹாரம், மேலசிந்தாமணி, திருச்சி - 2.

K.E. NAMPILLAI N. SRIDHAR, N.K. SEKAR



• ராகவன்





மருத்துவமனையில்...

# ஆஸிட் கலாசாரத்தின் அச்சுறுத்தல்!

ஏப்ரல் பத்தாம் தேதி - இரவு பத்து மணி.

அடுத்த நாள் பரீட்சை இருந்ததால், அதற்கான தயாரிப்புகளையெல்லாம் சரிபார்த்துவிட்டு, சின்மயா நகரிலுள்ள தமது வீட்டிற்கு ஸ்கூட்டரில் புறப்பட்டுக் கொண்டிருந்தார் பச்சையப்பா கல்லூரி முதல்வர் ஆர்.எஸ். ராகவன்.

மிகவும் லேட்டாக வீட்டிற்குக் கிளம்புவது என்பது அவருக்குப் புதிதல்ல. எப்போதுமே கல்லூரி வேலைகளை அன்றன்றைக்கே முடிக்கும் வழக்கம் கொண்டவராதலால், தினசரி இரவு எட்டு, ஒன்பது என்றாகி விடும்.

கல்லூரியிலிருந்து கிளம்பியவர், பூந்தமல்லி நெடுஞ்சாலையில் விரைந்து கோயம்பேடு அருகில் நூறு அடி சாலையைக் கடக்க இருக்கையில் எதிரே ஸ்கூட்டரில் இரண்டு இளைஞர்கள் - மோதுவது போல் வந்ததால் அவர்களைப் பார்த்து தமது வண்டியை நிறுத்தினார் ராகவன்.

**அந்த இளைஞர்களில் ஒருவன் கண்ணிமைக்கும் நேரத்தில் ராகவனை நோக்கி ஒரு திரவத்தை வீசினான்.** அது முகத்திலும் கண்ணிலும் தோளிலும் பட்டவுடன், துடிதுடித்துப் போனார் அவர். ரசாயனப் பேராசிரியரான அவருக்குப் புரிந்து விட்டது - **ஆஸிட்!**

புயலெனப் பறந்துவிட்டார்கள் அந்த இளைஞர்கள். வேதனையும், எரிச்சலும் உயிரை எடுக்க, மன உறுதியின் துணையுடன் வீட்டிற்கு வந்து சேர்ந்தார். அப்புறம் மகள் உதவியுடன் அப்போலோவில் அட்மிஷன்.

அடுத்த நாள் பேப்பர்கள், 'கல்லூரி முதல்வர் மேல் ஆஸிட் வீச்சு' என்று பரபரப்பாக்கியதெல்லாம் தேர்தல் சப்தத்தில் அடங்கிப் போயிற்று. வழக்கமாக இதுபோன்ற விஷயங்களில் புலனாய்வு செய்யும் ஜூனியர்களும் சீனியர்களும் கூட கப்சிப்!

என்ன நடந்தது?

அப்போலோ ஆஸ்பத்திரி அறை எண் 381. "விசிட்டர்கள் அனுமதி கிடையாது" என்ற அறிவிப்பு. ஆனால் கதவைத் தட்டி விஷயத்தைச் சொன்னதுமே, 'வாங்க... உட்காருங்க...' என்கிறார் ராகவன். வலது முகம் திராவக வீச்சால் செக்கச் செவேல் என்றாகி இருக்கிறது. வலது கண்ணில் கட்டு ('பார்வை வந்துவிடும்' என்கிறார் டாக்டர்) சட்டையையும் மீறி வலது தோளில் இறங்கிய ஆஸிட் அந்தப் பகுதியைப் பார்க்க முடியாத அளவுக்கு அவலட்சணமாக்கி இருக்கிறது. டவல் போட்டு மறைத்துக் கொள்கிறார்.

"ஒழுக்கத்தை அமுல்படுத்தியதற்குக் கிடைத்த பரிசு இது!" என்கிறார் மெல்லிய குரலில்.

"எனக்கு ஆசிரியர்கள் முழுக்க, முழுக்க ஒத்துழைப்புக் கொடுத்தனர். அவர்கள் தந்த ஆதரவின் காரணமாகத்தான் ஒழுக்கத்தைச் செம்மையாக அமுல்படுத்த முடிந்தது" என்றார் ராகவன்.

கட் அடிப்பது, வகுப்புகளில் கலாட்டா செய்வது போன்றவற்றுக்கு 144; அட்டெண்டென்ஸ் இல்லாவிட்டால், பரீட்சை எழுத மறுப்பு... மாணவர்கள் நரம்புகள் முறுக்கேறாமல் இருக்குமா? அதுவும் பச்சையப்பா மாணவர்கள்!

ராகவன் பச்சையப்பாவின் பழைய மாணவர்தான். 1960களில் அமெரிக்காவுக்குச் சென்று வந்தவர். 71இல் இருந்து பச்சையப்பாவில் வேலை. படிப்படியாக உயர்ந்தவர். பச்சையப்பா அறக்கட்டளையின் கந்தசாமி நாயுடு கல்லூரிக்கு முதல்வராக இருந்து, பின்னர் 1995 இல் சென்னை பச்சையப்பா கல்லூரிக்கு முதல்வரானார்.

இவரை முதல்வராகப் போட்டவுடன், பிடிக்காத சிலர், சில அரசியல் கட்சிகளைத் தூண்டிவிட்டு போஸ்டர்கள் போட்டார்கள். குறிப்பாக பா.ம.க. கட்சியைச் சேர்ந்தவர்களும், தி.க. இயக்கத்தினரும், ராகவன் நியமனத்தால் கடுப்பாகி இருந்ததாகத் தெரிகிறது.

"நான் கந்தசாமியில் இருந்தபோது ஒரு மாணவனைக் கடுமையாகத் தண்டித்தேன். அந்த மாணவனின் தம்பி பச்சையப்பாவில் படிக்கிறான். பரீட்சை நடக்கும்போது வகுப்பறைக்குள் புகுந்து தம்பிக்கு உதவி பண்ண வந்தான் அண்ணன். இதை எப்படிச் சகித்துக் கொள்ள முடியும்? தம்பியைக் கல்லூரியைவிட்டு சஸ்பெண்ட் செய்தேன். அவர்கள் மேல் எனக்குச் சந்தேகம் இருக்கிறது" என்கிறார் ராகவன்.

இதுவரை போலீஸ் யாரையும் கைது செய்ததாகத் தெரியவில்லை. அரசியலில் மட்டுமே நிலவி வந்த ஆஸிட் கலாசாரத்தை மாணவ உலகத்துக்குள் வர அனுமதித்துவிட்டு கைகட்டிப் பார்த்துக் கொண்டிருப்பதா...?

— ப்ரியன்

சிங்கப்பூரில்
ஹாஸ்டலில்
எப்போதாவது வந்து
பார்க்கிற அம்மா...
மிசஸ் ஷாநவாஸ்...
மிசஸ் குமிகோ.....
மிசஸ் பிரான்சுவா.....
ஒவ்வொரு முறை
யும் ஒவ்வொரு
பெயர்... அம்மாவின்
அடுத்தடுத்த
கணவர்கள் எல்லோ
ருமே ஓவியர்கள்
தான்...

இவரில்லை அது... ரொம்பப் பருமனான மனிதர் அவர்...

பாரீஸ் மியூசியம் தே ஆர்சேயில் டச்சு ஓவியர்கள் பற்றிய கலந்துரையாடலின்போது பாஸ்டின் கிராமர் பற்றி விடாமல் கேட்டது... இவரில்லை... உதடு வெளுத்த ஹாலந்துக்காரர் அவர்...

நினைவின் உள்ளறைகளில் இன்னும் புகுந்து தேட லீக்கு ஆயாசமாக இருந்தது.

இவர் யாராகவும் இருக்கலாம்... ஓவியங்களோடும், அவற்றை வரைகிறவர்களோடும், விற்கிறவர்களோடும் எந்த விதத்திலும் சம்பந்தப்படாமல்...

லீ தன்னையறியாமல் பெருமூச்சு விட்டார். ஓவியங்களை விலக்கிப் பார்த்தால் அவர் வாழ்க்கையே வெறுமைதான்... வண்ணம் படியாத கான்வாஸ் போல...

ஓவிய விமர்சகர்... மதிப்பீட்டாளர் பரம்லீ... பிரபலமான 'ஆர்ட் போரம்' பத்திரிகையில் இந்திய ஓவியங்கள் பற்றி நுணுக்கமான அலசல் கட்டுரை எழுதும் பரம்லீ... போஸ்டன் மெட்ரோபோலிடன் மியூசியத்திலும், நியூயார்க் 'மோமா'விலும் லத்தீன் அமெரிக்க ஓவியக் கண்காட்சிகளுக்கு ஏற்பாடு செய்கிற அமைப்பாளர் பரம்லீ... கோடி கோடியாகப் பணம் புரளும் லண்டன் சோத்பீ ஓவிய ஏலத்தில்...

நினைவு வந்துவிட்டது.

பதினேழு இந்திய ஓவியர்களின் படைப்புகள். அவ்வளவாக அறிமுகம் ஆகாதவர்கள். லீதான் ஏற்பாடு செய்தது... விளக்கக் கையேடு எழுதியது...

இரண்டாயிரம் பவுண்ட் விலை போன ஜூலியா பொன்னம்பலத்தின் 'மின்சாரம் ப்யூஸ் போன கோவிலில் கடவுள்...' ஆயிரத்து நானூறுக்குப் போன விட்டல்ராவின் 'அறுந்து போன செருப்போடு குடை ரிப்பேர்க்காரன்...'

குடை ரிப்பேர்க்காரனை ஏலத்தில் வாங்கியது இந்த வெள்ளைக்காரர்தான்.

# டேக் பார்த்திங் ஈரு

**1**

சிங்கப்பூரிலிருந்து ஒன்றரை மணி நேரம் தாமதமாகப் புறப்பட்ட விமானத்தின் எக்ஸிக்யூடிவ் வகுப்பில் பரம்லீ தவிர ஒரு வெள்ளைக்காரர் மட்டும்தான். வயதானவர். மடியில் வைத்த கறுப்புத் தொப்பியும், காதில் தூக்கு மாட்டியிருந்த அரைவட்டக் கண்ணாடியும், அங்கங்கே ரத்தம் சிந்தியது போலத் திட்டுக்கள் ஆக்கிரமித்த வழுக்கைத் தலையுமாகத் தூங்கி விழுந்த அவரை எங்கேயோ பார்த்த நினைவு லீக்கு...

எங்கே...? போன மாதம் லண்டன் விக்டோரியா ஆல்பர்ட் மியூசியத்தில் பிரெஞ்சு கயானா ஓவியங்களையும் மற்ற ஆப்பிரிக்க ஓவியங்களையும் ஒப்பிட்டுப் பேசியபோது முதல் வரிசைக் கோடியில் இதே போலத் தூங்கி வழிந்தபடி...

விமானத்தின் பின்பகுதியிலிருந்து ஏக இரைச்சலாக உயர்கிற சத்தம். 'கால்நடை வகுப்பு' என்று விமானக் கம்பெனிகள் செல்லப் பெயர் வைத்து அழைக்கும் 'எகானமி க்ளாஸ்' அது.

லீ பின்னால் திரும்பிப் பார்த்தார்.

இந்தியர்கள். சிங்கப்பூரின் எலக்ட்ரானிக் மாயாஜாலங்களைப் பை, பையாக வாங்கி அடைத்துக் கொண்டு பம்பாய் திரும்புகிறவர்கள்.

சட்டை போடாமல் பின்னாலிருந்து ஓடிவந்த ஓர் ஐந்து வயதுச் சிறுவன் லீயின் பக்கமாக இரைக்க இரைக்க நின்றான்.

"மம்மீ... பக்டோ..." கும்மாளமாக உயரும் குரல்.



# ஜெயில்...

இந்த வயதில் லீயும் விமானத்தில் போயிருக்கிறார். அம்மா வுடன்தான். ஒரு சிரிப்புமில்லை... கும்மாளமுமில்லை... அழுதபடி இருந்த அம்மா மடியில் சாய்ந்து இருந்தபடி... வெளி யில் நகர்கிற மேகக் கூட்டங்களைப் பார்த்தபடி...

அழுக்குக் கட்டடப் பணிகளில் அம்மா கையைப் பிடித்த படி ஏறி இறங்கி... நெற்றி நிறையச் சந்தனம் பூசிக் கொண்டு யாரோ கொடுத்த கசந்து வழியும் தேநீரைக் குடித்துக் கொண்டு... பகல் வெப்பம் மிகுந்த தெருக்களில் ரிக்ஷாவில் நகர்ந்து...

சிங்கப்பூரில் ஹாஸ்டலில் எப்போதாவது வந்து பார்க்கிற அம்மா... மிசஸ் ஷாநவாஸ்... மிசஸ் குமிகோ... மிசஸ் பிரான்கவா... ஒவ்வொரு முறையும் ஒவ் வொரு பெயர்... அம்மாவின் அடுத் தடுத்த கணவர்கள் எல்லோருமே ஓவி யர்கள்தான்...

ஓவியப் பைத்தியம் அவனிடமிருந்து தான் பிடித்திருக்க வேண்டும் லீக்கும்....

"முன்னா... ஆஜா..."

வாய் நிறையத் தாம்பூல மும், உடம்பு முழுக்க நகை களுமாக, ஆடி அசைந்து வந்து, சின்னப் பையனைக் கையைப் பிடித்து அழைத்துப் போனவளின் புடைவைத் தலைப்பு லீயின் முகத்தில் விழுந்து தவழ்ந்து விலகி, அத்தர் வாடையை மிச்சம் வைத்துவிட்டு நகர்ந்தது.

"விமானத்தையே வீடு போல நினைத்துக் கொள் கிறார்கள்..."

முணுமுணுத்தபடி வந்த ஏர்ஹோஸ்டஸ், லீ பக்கம் குனிந்து அழகாகச் சிரித்தாள்.

"சூடாக... குளிர்ச்சியாக எதுவும்?"

"ஒரு கருங்காப்பி... முடியு மானால்..."

லீ மரியாதையோடு சொல்ல, "நிச்சயமாக" என்ற படிக்கு, மற்றொரு பெரிய புன்னகையோடு நடந்தாள்.

எகானமி வகுப்பில் யாரா வது அழைக்கிறபோது, இந்தப் புன்னகை வெகுவாகச் சுருங்கி சிடுசிடுப்பில் முடிய லாம் என்று லீக்குத் தோன்றி யது.

அவர் இரண்டு வகுப் பிலும் பயணம் செய்திருக் கிறார்.

"ஆக, கேளு நாயர் உங்களையும் பம்பாய்க்கு இழுத்து விட்டாரா?"

திடீரென்று மிக அருகில் கேட்கும் குரல்.

லீ நிமிர்ந்து பார்க்க, பக் கத்து இருக் கையை ஆக் கிரமித்த

இரா. முருகன்



# உங்களால் முடியாதா?

''கம்ப்யூட்டர் கற்றுக் கொண்டால் உடனே வேலை கிடைக்குமென்று எல்லோரும் சொல்கிறார்களே'' என்று ஒரு கம்ப்யூட்டர் இன்ஸ்டிட்யூட்டில் சேர்ந்தேன். பயிற்சி முறை முற்றிலும் இங்கிலீஷிலேயே இருந்ததால் எனக்கு எதுவுமே புரியவில்லை.

''தமிழ் மீடியத்தில் படித்த உன்னால் கம்ப்யூட்டர் பயிற்சி பெற முடியாதுன்னு சொன்னேனே கேட்டியா, உனக்கு ஏன் இந்த வீண் வேலை'' என்று எனது உறவினர்களும், தோழிகளும் கிண்டலாகப் பேசினார்கள்.

எடுத்துக் கொண்ட முயற்சியை வெற்றிகரமாக முடித்தே தீரவேண்டும் என்ற உறுதியுடன் விவேகானந்தாவில் சேர்ந்து இங்கிலீஷ் கற்றுக் கொள்ளத் தொடங்கினேன். ஆர்வமும், முயற்சியும் இருந்தால் ஆங்கில மொழியை எளிதாகக் கற்று கொள்ள முடியும் என்பதை விவேகானந்தாவின் முறையான பயிற்சி உறுதி செய்தது.

ஆம்! விவேகானந்தாவின் பயிற்சியின் உதவியால் கம்ப்யூட்டர் பயிற்சியை வெற்றிகரமாக நிறைவு செய்த நான் இப்பொழுது ஒரு நிறுவனத்தில் 'கம்ப்யூட்டர் புரோக்கிராமராகப்' பணியாற்றி வருகிறேன்."

V. Priya
Computer Programmer
Saffron Systems & Services

கடந்த 15 ஆண்டுகளில் 5 லட்சத்திற்கும் மேற்பட்டவர்கள் விவேகானந்தாவின் ஆங்கிலப் பயிற்சியில் சேர்ந்து பயனடைந்துள்ளனர். நீங்களும் வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில் தபால்மூலம் சுலபமாக இங்கிலீஷ் கற்றுக் கொள்ளுங்கள். சரளமாகப் பேசத் தொடங்குங்கள். ➤➤

**நேர்முகப் பயிற்சி மையங்கள்:-** சென்னை: 9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-17. ★ 18, ராமசாமி தெரு, மேற்கு தாம்பரம், சென்னை-45. ★ 30, மேடவாக்கம் டாங்க் ரோடு, கீழ்பாக்கம், சென்னை-10. திருநெல்வேலி: 16A, திருச்செந்தூர் ரோடு, முருகன் குறிச்சி, திருநெல்வேலி-2. திருச்சி: சோழன் டவர்ஸ், கீழசிந்தாமணி, (E.R. ஸ்கூல் எதிரில்) திருச்சி-2.

படி அந்த வெள்ளைக்காரர்.

"நினைவு இருக்காது... மறுமுறை அறிமுகப் படுத்திக் கொள்கிறேனே..."

சட்டைப் பையிலிருந்து அவர் எடுத்து நீட்டிய அட்டையை அரைக்கண்ணால் பார்த்தபடி, "நன்றாக நினைவிருக்கிறதே... மறக்க முடியுமா உங்களை... மிஸ்டர் தாம் ஸன்..." என்றார் வீ சிரித்தபடி.

பாஸ்டன்காரர். அமெரிக்கர்களுக்கு ஓவிய ரசனை சொல்லிக் கொள்கிறது போல இல்லா விட்டாலும், காசு ரசனை நிறையவே...

எல்லா சிறிய, பெரிய ஓவியர்களின் வர லாறு முழுக்கத் தெரியும் இவர்களுக்கு. இன் னும் இரண்டு வருடத்தில் இன்னார் வரைந்த தற்கு மதிப்பு உயரும் என்று கணக்குப் போட்டு, வாங்கி வைப்பார்கள்...

லத்தீன் அமெரிக்க ஓவியங்கள் பத்து வரு டத்தில், இருபது மடங்கு விலை ஏற இவர் கள்தான் காரணம்... ஷேர் மார்க்கெட்டைவிட லாபமான முதலீடு...

கொஞ்ச நாளாக இவர்களைப் போன்றவர் களால் இந்திய ஓவியங்களுக்கு மதிப்பு ஏறி இருக்கிறது... குறிப்பாக கேளு நாயர்.

"நாற்பது வருடம் முன்னால் இறந்துபோன கேளு நாயரின் படைப்புக்கள் இவ்வளவு நாள் கழித்துப் பரபரப்பாகப் பேசப்படுவது கவா ரசியமான விஷயம் இல்லையா?"

தனக்கும் ஒரு கருங்காப்பி கொண்டு வரும் படி ஹோஸ்டஸிடம் சொல்லிவிட்டு, தாம்சன் வீயைப் பார்த்துக் கேட்டார்.

வீ ஒரு நிமிடம் தகுந்த சொற்களுக்காக யோசித்தார்.

"அப்படி இல்லை... கேளு நாயர் எப்போ துமே பிரபலமானவர்தான்... அவருடைய மூன்று ஓவியங்கள் நாற்பது வருடம் கழித்து வெளியே வந்திருப்பதாகச் சொல்கிறார்களே... அதில்தான் சுவாரசியம்..."

வெள்ளித் தட்டில் காப்பிக்குவளை ஏந்தி வந்த ஹோஸ்டஸ் மறுபடி பவ்யமாகக் குனிந் தாள்.

"இரண்டு பேருக்கும் அசைவ உணவு தானே?"

"எனக்குச் சைவ உணவு... முடியுமானால்..."

வீ மன்னிப்புக் கேட்கிற பாவனையில், லேசாகச் சிரித்தபடி சொன்னார்.

"இந்தியாவுக்குப் போகும்போது இந்திய னாக இருக்க முயற்சியா மிஸ்டர் வீ?"

தாம்சன் அவர் தோளில் தட்டி மஞ்சள் பல் தெரியச் சிரித்தார். அமெரிக்கர்களுக்கும், பிரிட்டிஷ்காரர்களுக்கும் மொழி ஒன்றாக இருந்தாலும், பழக்கத்தில்தான் எத்தனை வித்தியாசம்... அறிமுகப்படுத்தி வைக்க ஆள் கிடைக்காவிட்டால், பிரிட்டிஷ்காரர் ஆயுசுக் கும் ஒரு வார்த்தை பேசமாட்டார்...

## அருள்வாக்கு



**25** வயசு, 30 வயசுக்குக் கூடப் பெண்கள் கல்யாணமாகாமல் நிற்பதற்குக் காரணம் விவாஹத்தைப் பண சம்பந்தமான விஷயமாக்கியிருப்பதுதான். இப்போது கல்யாணத்தில் நடக்கிற ஆடம்பரங்களும் வரதக்ஷிணை வாங்குவதும் சீர்செனத்தி கேட்பதும் சாஸ்திர சம்மதமானதல்ல. செலவழிப்பதற்குப் பெண் வீட்டுக்காரன் என்று ஒருத்தன் ஏற்பட்டிருக்கிறான் என்பதால் அவனிடம் ஒட்ட ஒட்டக் கறக்க வேண்டும் என்பதற்காகவே பிள்ளைக்கு "ஸூட் வாங்கித்தா; பூட்ஸ் வாங்கித் தா; ரிஸ்ட் வாட்ச் வாங்கித்தா" என்று பறிமுதல் மாதிரிப் பண்ணி, இந்த அலங்காரங்களோடு ஜானவாஸ ஊர்வலம் என்று ரொம்பவும் அத்தியாவசியமான அம்சம் மாதிரி விவாஹத்துக்கு முதல் தினம் பண்ணுகிறார்களே, இது சாஸ்திரத்தில் அடியோடு இல்லாத விஷயம். இதற்கு ஒரு மந்திரமும் கிடையாது.

பழைய நாளில் அதிபால்யத்தில் விவாஹமானதால், 'குழந்தைகளை உத்ஸாஹப்படுத்த வேண்டும், ஹோமப் புகையில் கஷ்டப்படுகிறதுகளே!' என்று விளையாடல், நலுங்கு, ஊர்வலம் என்றெல்லாம் வைத்தார்கள். அவ்வளவுதான்.

"கன்யாம் கனக ஸம்பந்நாம்" என்று சாஸ்திரத்தில் சொல்லியிருப்பதால், தங்கமானது லக்ஷ்மீ பிரஸாதத்தை உண்டாக்குவது என்பதால், தங்கத்திலே திருமாங்கலியம் மட்டும் பண்ணினால் போதும். மற்ற நகைகள், வைரத் தோடு முதலியன வேண்டாம். பட்டும் வேண்டாம். நூலில் கூறைப் புடைவை வாங்கினால் போதும். ஆந்திர தேசத்தில் இப்படித்தான் செய்கிறார்கள். எல்லாவற்றையும்விட, வரதக்ஷிணை தொலைய வேண்டும். ஊர் கூட்டி சாப்பாடு, பாட்டு, சதிர், பந்தல் என்று விரயம் பண்ணுவதும் போக வேண்டும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

லீக்கு இரண்டு தேசக்காரர்களையும் தெரியும்.

"நானே இந்தியன்தான்..." காப்பியைச் சுவைத்தபடி மெதுவாகச் சொன்னார் லீ. "பரம்லீ... பரம் அப்பா பக்கத்துப் பெயர்... லீ அம்மா குடும்பப் பெயர்..."

"அதுதானா விஷயம்... இந்திய ஓவிய ரசனை உங்கள் ரத்தத்திலேயே கலந்து இருக்கிறது என்று சொல்லுங்கள்... 'பினாஷ் ஆர்ட்' பத்திரிகையில் 'லட்சுமண் கௌடாவின் படைப்புக்கள் கண்ணியமானவை' என்று திட்டவட்டமாக எழுதியதற்கு, உங்களுக்குள்ளே இழையோடும் இந்தியக் கண்ணோட்டமும் கூடக் காரணமாக இருக்கலாம் இல்லையா மிஸ்டர் லீ?"

தாம்சன் காசு ரசனையோடு கலாரசனையும் கொண்ட அமெரிக்கர் என்று லீக்குப் பட்டது.

"கேளு நாயரின் ஓவியங்களை வாங்க டாலர் மூட்டையோடு கிளம்பிவிட்டீர்களா மிஸ்டர் தாம்சன்?"

தாம்சன் அவரைத் தீர்க்கமாகப் பார்த்தார்.

"உங்கள் சொல்லில்தான் எல்லாம் மிஸ்டர் லீ.. குறைந்தபட்ச விலை என்று நீங்கள் தீர்மானிப்பதைப் பொறுத்துத்தான் மேற்கொண்டு செயல்பட வேண்டும்... மூன்று ஓவியங்கள்... நாற்பது வருடம் பழையவை... தீ விபத்தில் எரிந்து அழிந்து போனது என்று தீர்மானமாக எழுதித் தள்ளப்பட்டு இப்போது திடீரென்று வெளியே கிளம்பி இருப்பவை..."

"மிட்டல் மீடியாக்காரர்கள் உங்களுக்கு அழைப்பு அனுப்பியிருக்கிறார்களா... இல்லை, யாராவது தரகர்களா?"

உயரமான விமான ஹோஸ்டஸ் கொண்டு வந்த காகித நாப்கின் அடுக்கிலிருந்து ஒன்றை உருவி வாயைத் துடைத்தபடி லீ கேட்டார்.

"ஆமாம்... மிட்டல் மீடியாவின் எம்.டி. ஆர்.என். மிட்டல்தான் கூப்பிட்டார்... அவருக்குப் போதாத காலம்... எப்பாடுபட்டோ சேகரித்து வைத்திருந்த அற்புதமான ஓவியங்களை விற்க வேண்டிய கட்டாயம்... சொல்லப் போனால் அந்த ஓவியங்கள் துரதிர்ஷ்டம் பிடித்தவை என்று இந்தியர்கள் போலச் சொல்லலாம். நான் நம்பாவிட்டால் கூட... வரைந்து முடித்ததும் கேளு நாயர் இறந்து போனார்... பம்பாயில் கண்காட்சிக்கு அனுப்பியபோது கண்காட்சியே பற்றி எரிந்தது... தகவல் கேட்டு மனக்கஷ்டத்தோடு நாட்டை விட்டுப் போன கேளு நாயரின் மனைவி என்ன ஆனாளோ... எட்டுப் படங்களில் மூன்று மட்டும் எப்படியோ தப்பி.. அதுவும் இத்தனை நாள் கழித்து... கேளு நாயரின் மனைவி, மகனுக்குக் கோடி கோடியாகப் பணம் சம்பாதித்துக் கொடுத்திருக்க வேண்டிய ஓவியங்கள், மாபியா மூலம் பல கை மாறி

மிட்டலிடம் போய்ச் சேர்ந்துள்ளன... அவை போன நேரமோ என்னவோ... மிட்டலுக்கு ஏகப்பட்ட தொழில் நஷ்டம்... கேளு நாயரின் ஓவியங்களை விற்றாவது கொஞ்சம் தலை நிமிரப் பார்க்கிறார்... போதாத காலம்தான். இந்தியர்கள் சொல்கிறதுபோல..."

**தா**ம்சன் நீளமாகப் பேசி நிறுத்தவும், தள்ளு வண்டியில் சாப்பாட்டுத் தட்டுக்களோடு பணிப்பெண்கள் ஏறவும் சரியாக இருந்தது.

"இந்த வருடம் பிரீமியோ மினர்வா பரிசு எந்த ஓவியருக்குத் தரப்படும் என்று நினைக்கிறீர்கள் மிஸ்டர் லீ?"

முள்கரண்டியால் இறைச்சியைக் கொத்தி எடுத்தபடி கேட்டார் தாம்சன்.

லீ அரிசிச் சோற்றின் சுவையில் ஆழ்ந்து போயிருந்தார்.

"என்ன... சைவ உணவு உங்களை முழு இந்தியனாக்கிவிட்டதா...? சாப்பிடும்போது பேசாதவர்கள் இந்தியர்கள்தான்..."

தாம்சன் தண்ணீர் நிறைந்த குவளையை ஜாக்கிரதையாக நகர்த்தியபடி முனகிக் கொண்டார்.

லீ மௌனமாகத் தலையாட்டினார். அறியாப் பருவத்தில் கண்ட மரக்கறி உணவு ருசி இன்னும் நாக்குக்கு இதமாகத்தான் இருக்கிறது... மனத்தில் மசங்கலாக அலைமோதுகிற குழந்தைப் பருவம்... வெட்டிப் போட்ட மரத் துண்டின் மேலே உட்கார்ந்து கொண்டு, எதிரே நீலம் விரிக்கும் ஆற்றில் நகரும் படகுகளைப் பார்த்துக் கொண்டு... சோப்புக் குமிழிகளை ஊதிக் கொண்டு... இந்தப் பிறவியில் தானா...?

"பிரீமியா மினர்வா பரிசு பற்றிக் கேட்டேனே?"

தாம்சன் விடாமல் பிடித்தார்.

"பதினைந்து பேர். தேர்ந்தெடுப்பில் தேறலாம்... யாராக இருந்தால் என்ன...? நீங்கள் தான் எல்லோருடைய படைப்புக்களையும் ஒன்று இரண்டாவது வாங்கி முடக்கியிருப்பீர்களே... முழுசும் லாபம்தான்..."

லீ கடைசித் துண்டு ரொட்டியைப் பிய்த்தபடி தாம்சனைப் பார்த்துக் கண் சிமிட்டினார்.

"இல்லை மிஸ்டர் லீ... முன்பு போல் எதையும் நம்பி வாங்க முடியவில்லை... ஏகமாகப் போலிகள் உலவ ஆரம்பித்து விட்டன... ஜைமினிராயின் ஓவியம் என்று இரண்டு வருடம் முன் ஆயிரத்து ஐந்நூறு டாலருக்கு வாங்கியது நகல் என்று அப்புறம்தான் தெரிந்தது... இரண்டு தலைமுறையாக பெட்ரோலும் டீசலும் விற்றுச் சேர்த்த காசு... ஏமாந்தால் மனசுக்குக் கஷ்டமாக இருக்கிறது."

பரம்பரைப் பணம்... பணத்தைத் தூண்டில் போட்டு எடுக்கும் பணம்... லீக்கு பரம்பரை சொத்து என்ன வந்தது? ஒரு மழை நாளில் அம்மாவின் கடைசிக் கணவரான மலேயாக்காரர் காலை விந்தி விந்தி நடந்து வந்து ஹாஸ்டலில் பார்த்துக் கொடுத்துவிட்டுப் போன பழைய பெட்டி தவிர... அவன் இறக்கும்போது ஒரே பிள்ளைக்குச் சேர வேண்டும் என்று சொல்லிப் போனது... பழைய டயரிகளும், ரசீதுகளும் அடைத்து... எல்லாம் பழைய சமாசாரங்கள்...

ஆனாலும் என்ன? லீக்குப் பணத்துக்கு என்ன குறைவு? சொந்தபந்தம் இல்லாவிட்டாலும், யாருக்கும் சேர்த்து வைக்க வேண்டிய அவசியம் இல்லாவிட்டாலும், கணிசமாக வந்து கொண்டேதான் இருக்கிறது...

"பயணிகளுக்கு ஓர் அறிவிப்பு. இன்னும் சற்று நேரத்தில் விமானம் பம்பாய் விமான நிலையத்தில் தரையிறங்கும். தங்கள் இருக்கைகளில் அமர்ந்து, சீட் பெல்ட்களை அணிந்து கொள்ளும்படி..."

தாம்சன் சீட் பெல்ட்டை அணிந்தபடி கீழே பார்க்க, சீராக விரியும் பம்பாய்.

"எல்லா நகரும் மேலே இருந்து பார்க்கும் போது அழகாகத்தான் இருக்கிறது..."

லீ சொன்னபடி கைப்பெட்டியை எடுத்தார்.

## 2

**இ**ந்த மூன்று ஓவியங்களும் என்னிடம் வந்து சேர்ந்தது இப்படித்தான்..."

மிட்டல் கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக் கொண்டார். ஏர் கண்டிஷனரின் குளிரிலும் அவருக்கு வியர்த்திருந்தது.



"எங்க அப்பா ரேஷன் கடையில வேலை செய்யறது உங்களுக்கு எப்படி சார் தெரியும்?"

"ஒரு கிலோவுக்கு எத்தனை கிராம்னு கேட்டா தொள்ளாயிரம்னு சொல்றியே?"

- விஜயலட்சுமி பிரட்ரிக்

ஜான் பாரி மோர் என்கிற அமெரிக்க நடிகர் நகைச்சுவையாகப் பேசுவதில் வல்லவர். அவர் உதிர்த்த முத்துக்களில் சில :

● அமெரிக்கா வளமான தேசம். ஒரு டாலர் கொடுத்தாலே ஆயுசுக்கும் தேவையான தலைவலி மாத்திரைகள் உங்களுக்குக் கிடைக்கும்; ஆனால் நீங்கள் இரண்டு வாரத்திலேயே அதை உபயோகித்து விடுவீர்கள்.

● நல்லவர்கள் இளமையிலேயே இறந்து போகிறார்கள் - ஏன் என்றால் நல்லவனாக வாழ்ந்து பயன் எதுவுமில்லை என்பது அவர்களுக்குத் தெரிய வருவதால்.

● புதுக்கவிதை பழைய கவிதையின் இலக்கணத் தளைகளை அறுத்து சுதந்திரமாக எழுதப்படுகிறது என்கிறார்கள். அதற்குச் சுதந்திரம் தந்தவர் யார்? நான் அறிய விரும்புகிறேன்.

● அழகான பெண்ணொருத்தியை முதல் முறை சந்திப்பதற்கும் அவள் காய்ந்த கருவாட்டு மீன் போல இருக்கிறாள் என்று உணர்வதற்கும் இடையில் உள்ள அற்புதமான வேளையில் நாம் உணர்வதுதான் காதல்.

தகவல் : எஸ். சுமதி



டெல்லி ஃபரீதாபாத் தொகுதியில் வாக்காளர்கள் அடையாள அட்டை வழங்குவதற்காகப் புள்ளி விவரங்கள் சேகரிக்க அரசு அதிகாரிகள் வீடு வீடாகச் சென்று கொண்டிருந்தனர்.

ஒரு வீட்டில் இள நங்கை மட்டுமிருந்தாள். அவளுக்கு 'இந்தி' பாஷை சரியாகத் தெரியாது. தந்தையின் பெயர் என்ன (பாப்கா நாம்) என்ற கேள்வியைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் 'மாலும் நஹி' என்று கூறிவிட்டாள்.

அடையாள அட்டை அவளுக்கு விரைவிலேயே வழங்கப்பட்டது. அவளுடைய தந்தையின் பெயர் 'மாலும் நஹி' என்றே குறிப்பிடப் பட்டிருந்தது!

- பத்மா மணாளன்

ஆதாரம் : டைம்ஸ் ஆஃப் இந்தியா

லீ பளிங்கு மேஜையில் விரலால் அழித்து அழித்து எழுதியபடி அவரையே பார்த்தபடி எதிரே உட்கார்ந்திருந்தார்.

"சாடிலைட் டி.வி.யில் பணத்தை முடக்கி நஷ்டப்படாமல் என் ஏழு பத்திரிகைகளோடு நிறுத்தியிருந்தால், நான் இந்த ஓவியங்களை விற்க வேண்டியதே இருக்காது..."

எல்லாம் லீ ஏற்கெனவே கேட்டதுதான்... எரிந்து போன கண்காட்சியிலிருந்து களவு போன மூன்று படங்கள்... மிட்டல் மீடியாவை முழுக விடாமல் காப்பாற்றப் போகிறவை...

"ஆனால், மொத்தம் எட்டு இல்லையா கண்காட்சிக்கு வந்தது. மீதி ஐந்து எங்கே...?"

லீ அமைதியான குரலில் கேட்டார்.

மிட்டல், தெரியாது என்ற பாவனையில் தோளைக் குலுக்கினார்.

"யார் கண்டது... இந்த மூன்றும் இரண்டு கோடிக்கு விலை போனால், அவையும் ஒரு வருடமோ, ஆறு மாதமோ கழித்து வெளியே வரும்... இல்லையா மிஸ்டர் மிட்டல்? கண் காட்சி தீப்பற்றி எரிந்தது ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்து மூன்றாம் வருடம் செப்டம்பர் பதினெட்டு... கண்காட்சியை ஏற்பாடு செய்த ராம்நாராயண்... ஆர். என். மிட்டல் என்ற ராம்நாராயண் மிட்டல் கையெழுத்துப் போட்டு, கேளு நாயரின் மனைவிக்கு அனுப்பிய ரசீது இதோ..."

லீ மக்கி மடிந்த பழைய காகிதத்தை மிட்டலுக்கு நேரே நீட்டினார்.

"சாரி... தாமதமாகிவிட்டது... ஓவியங்களைப் பார்க்கலாமா?"

தாம்சன் கதவைத் தள்ளிக் கொண்டு, வெளியேயிருந்து வந்தார்.

"தாராளமாக... இங்கே அறை ஓரமாகத் துணி மூடி.... அவைதானே மிஸ்டர் மிட்டல் உங்களின் பொக்கிஷங்கள்?"

லீ மெல்ல நடந்து அறைக் கோடிக்குப் போனார். முதல் ஓவியத்தின் துணி மறைப்பை விலக்கினார்.

"வாவ்.. சோப்புக் குமிழ் ஊதும் ஆறு விரல்கள் உள்ள பையன்... கேளு நாயர் தன் மகனையே வரைந்த அற்புத ஓவியம்... நாற்பதாயிரம் பவுண்ட் பெறுமானம் குறைந்த பட்சம்... ஓ நோ... மிஸ்டர் தாம்சன்... இந்தப் படம் நாற்பது பவுண்ட் விலை போனால் அதிகம்... போலிக்கு அவ்வளவுதான் கிடைக்கும்... பாவம் மிஸ்டர் மிட்டல் இந்த நகலை எத்தனை கோடி கொட்டிக் கொடுத்து வாங்கினாரோ...?"

சிரித்தபடி ஓவியத்தைச் சுட்டிக்காட்டிய லீயின் வலது கையில் ஆறாவது விரல் தனியாக ஆடிக் கொண்டிருந்தது.

• ஆச்சரியமில்லை



# சுகன்யா ஒரு கோடி நஷ்டஈடு கேட்டுள்ளாரே?

● இர. ரூபன், கோபால்சமுத்திரம்.

? ஜெ. ஹைதராபாத் பயணம் எப்போது?

! ஊழலில் சம்பாதித்த உடைமைகள் லாரி லாரியாக, மாபெரும் கன்டெய்னர்களில் போய்விட்டன. தேர்தல் முடிவு தெரிந்ததும் இவரும்...

● ஆர். முருகானந்தம், எஸ். மாரியூர்.

? ஹிமாசல பிரதேச ஆளுனர் ஷீலா கௌல் அவர்களின் ராஜினாமா பற்றி...?

! அவர் எங்கே செய்தார்...? ராஜினாமா 'செய்யப்பட்டார்'! பாராட்டு ஜனாதிபதி சர்மாவுக்கு; குட்டு நரசிம்மராவுக்கு!

● ஆர். ராஜலட்சுமி, கரூர்.

? தேர்தல் நடைபெறும் தேதிக்கும் வோட்டுகள் எண்ணப்படும் தேதிக்கும் இடையில் சுமார் ஆறு நாட்கள் உள்ளனவே...?

! சில மாநிலங்களில் மூன்றாவது கட்ட வாக்குப்பதிவு இருப்பதால் இந்தத் தாமதம் தவிர்க்க முடியாததாகிறது. இதனால் சஸ்பென்ஸ் இருக்கிறது என்பதோடு, ஊழலுக்கு வாய்ப்பு அளித்துவிடுமோ என்கிற சந்தேகமும் எழுகிறது.

● ரொசாரியோ ரவிச்சந்திரன், சென்னை – 59.

? கிரிக்கெட் வீரர்கள் அனைவரும் இடைவிடாது பபிள்-கம் மென்று கொண்டிருப்பதன் அவசியம் என்ன...? முகத்துக்கு 'எக்சர்சைஸ்' என்பதெல்லாம் உண்மையா?

! சிகரெட்டுக்கு மாற்றாகப் பலர் பபிள் கம்மைப் பயன்படுத்துகிறார்கள். அந்த அளவில் 'ஆரோக்கியம்' என்று சொல்லலாம். முகத்தசைக்குப் பயிற்சி என்பதும் சரியே. ஆட்டத்தின் டென்ஷனைக் குறைக்கவும் உதவும். ஆயினும், மென்று முடிந்ததைக் கண்ட இடத்தில் துப்பி வைப்பது தான் அவதி!

● டி.வி.எஸ். பாலு, சித்தமல்லி.

? காங்கிரஸார் 'காந்தியவழி, காந்தியவழி' என்கிறார்கள்.... இந்தியா சுதந்தரம் அடைந்த உடனேயே காங்கிரசைக் கலைக்கச் சொன்னார் காந்தி. அதை மட்டும் காங்கிரஸார் ஏற்றுக் கொள்ளவில்லை... பின்னர் எப்படி அவர்கள் காந்தியவழியில் செல்வதாக எடுத்துக் கொள்ள முடியும்...?

! காந்தியக் கொள்கை வேறு; காந்திஜியின் அபிப்பிராயங்கள் என்பவை வேறு. சத்தியம் அஹிம்சை, மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு, தேச விடுதலை, கருத்து சுதந்தரம் போன்றவை அடிப்படை காந்தியக் கொள்கைகள். இவற்றை ஏற்பவர்கள் காந்தியவாதிகள். ஆனால் தனித்தனி பிரச்னைகளில் கருத்து மாறுபாடுகள் இருக்கக்கூடும். அவ்வாறு இருக்க வேண்டும் என்றும் காந்திஜி விரும்பினார். அவரது கருத்துகள் அத்தனையையும் இதர காங்கிரஸ் தலைவர்கள் ஏற்றதாக சரித்திரம் சொல்லவில்லை. காந்திஜியும் தமது அபிப்பிராயங்களை மாற்றிக் கொண்டதுண்டு... இந்த விளக்கத்தை நான் தருவதால் இன்றைய காங்கிரஸ், காந்தி வழியில் செல்வதாக ஒப்புக் கொண்டதாகாது!

● அ.க. கிருஷ்ணன், சென்னை – 39.

? 'அ.தி.மு.க., தேசியத்துக்கு எதிராகவும் செல்லாது, தெய்வீகத்துக்கு எதிராகவும் செல்லாது' என்று குமரி அனந்தன் பேசியுள்ளது பற்றி...?

! அனில்லாத கூட்டத்தில் என்ன வேண்டுமானாலும் பேசலாம்!

● ச. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.

? 'கருணாநிதியை மீண்டும் முதல்வராக்க மூப்பனார் நடத்தும் நாடகத்தின் ஒரு பகுதி தான் தமிழ் மாநில காங்கிரஸ்' என்று வை. கோபால்சாமி



• உண்மை



• எது...?



• என்ன...



• ...வேறுபாடு?

கூறியுள்ளாரே?

! 'மறுபடியும் 'ஜெ'யை முதல்வராக்க கோபால் சாமி நடத்தும் நாடகம்தான் ம.தி.மு.க. என்று தி.மு.க.வினரும் கூறியுள்ளார்களே!

● அவ்வை. கே. சஞ்சீவிபாரதி, கலிங்கியம்.

? 'ஜெ' நோபல் பரிசு பெறத் தகுதியானவரா?

! எது செய்தாலும் கின்னஸ்ஸில் இடம்பெறலாம்; நோபல் பரிசு வாங்க முடியாது!

● இரா. திலீப், திருச்சி - 14.

? மூப்பனாருக்கும் குமரியாருக்கும் என்ன வித்தியாசம்?

! வேறென்ன...? சூட்கேஸ்தான்!

● நி. சுபாகரன், சுப்பராயர்புரம்.

? 'ஜெ. ஆட்சிக்கு வந்தால் தமிழகத்தை ஆண்டவனாலும் காப்பாற்ற முடியாது...' என்கிறார் ரஜினி; மனோரமாவோ, 'ஜெ' ஆட்சிக்கு வரவில்லையானால் தமிழகத்தை கடவுள் கூடக் காப்பாற்ற முடியாது என்கிறார்... எது உண்மை?

! ஆச்சியின் ஆசை நிறைவேறினால் அந்த ஆண்டவனையே யாராலும் காப்பாற்ற முடியாது!

● என். ராஜி, மேல்பாதி.

? இன்றைய அரசியலில் கதாநாயகர் யார்...?

! வாக்காளர்!

● வி.பி. காந்திமதி, பாஸ்டின் நகர்.

? அ.தி.மு.க. அரசின் சாதனைகளையும் அது போலீசாருக்கு அளித்துள்ள சலுகைகளையும் சுற்றறிக்கையாக அனுப்பியுள்ளாராமே தேவாரம்...?



• நப்பாசை!



• கொள்கையும் கருத்தும்



• 'செய்யப்பட்டார்'!

! மு.க. பதவிக்கு வந்தால் நிச்சயமாக எதுவும் கிடைக்கப் போவதில்லை. ஒருவேளை அம்மா மறுபடி வந்துவிட்டால் வாரியப் பதவியாவது கிடைக்காதா என்கிற நப்பாசை.. அதனால்தான் விதி முறைகளையும் மீறி காரியம் பண்ணியிருக்கிறார்.

● ஜே. கண்ணன், சென்னை - 101.

? 'வோட்டுப் போட பணம் கொடுத்தால் மறுக்காதீர்கள்; ஏனெனில் அது உங்கள் பணம்...' என்கிறாரே ரஜினி!

! வரிப்பணம் போலவே, லஞ்ச ஊழல் பணம் என்பது மக்களின் பணம் - மக்கள்தான் சுரண்டப் படுகிறார்கள் என்பதில் சந்தேகமேயில்லை. லஞ்ச ஊழலில் சம்பாதித்த கறுப்புப் பணத்தைத்தான் வோட்டுக்காக விநியோகிக்க முடியும் என்பதிலும் சந்தேகமில்லை. 'பணத்தை வாங்கிக் கொண்டாலும் மாற்றுக் கட்சிக்கு வோட்டுப் போடுங்கள்' என்று கூறியதால் பணத்துக்காக வோட்டை விற்கச் சொன்னதாகவும் ஆகாது.

● க.க.வே. சித்திரவேலு, கருப்பம்புலம்.

? 'தொழில் துறையில் பதிமூன்றாவது இடத்தில் இருந்த தமிழகம் மூன்றாவது இடத்துக்கு முன்னேறியிருக்கிறது' என்கிறாரே ஜெயலலிதா...?

! 'தோசையை வேணுமானால் திருப்பிப் போடலாம்; இட்டிலி சுடும்போது திருப்பிப் போடவா முடியும்?' - திருநெல்வேலி வட்டார வழக்கு.

● மு. முத்துவெங்கிட ஆனந்தன், வந்தவாசி.

? நடிகை சுகன்யா ஒரு கோடி ரூபாய் நஷ்ட ஈடு கேட்டு நோட்டீஸ் விடுத்திருப்பது குறித்து...?

! நிகழ்ச்சியை ஒளிபரப்ப பல கோடிகள் கைமாறியிருக்கும்போது சுகன்யா ஒரு கோடி கேட்டதில் ஆச்சர்யமில்லை. பத்திரிகை ரிப்போர்டிங்/டெலிவிஷன் நிகழ்ச்சிகள் ஆரோக்கியமான திசையில் திரும்ப வேண்டு மாயின் இதுபோன்ற வழக்குகள் வெற்றி பெற வேண்டும்.



• ரெடி, ஸ்டெடி...

● சுதந்திரச்செல்வன், சித்தமல்லி.

? இந்த முறையும் தமிழ்நாடு ஓரம்கட்டப்பட்டு, இங்கிலாந்து செல்லும் இந்திய கிரிக்கெட் அணியில் ஐந்து கர்நாடக வீரர்கள் உள்ளனரே...? (தேர்வுக் குழு தலைவர் விஸ்வநாத் கர்நாடகத்தைச் சேர்ந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது.)

! அது மட்டுமல்ல.. இங்கிலாந்தை எதிர்த்து ஆட நான்கு ஸ்பின் போலர்களை அழைத்துப் போகிறார்கள். வேஸ்ட்!

● கே. சோமசேகர், காவேரிப்பட்டணம். ◻

? எலக்ஷன் முடிந்தபிறகு 'ஜெ' பதவி பறிப்பு வழக்கு வெற்றி அடைந்து என்ன பிரயோஜனம்?

! மக்கள் தீர்ப்பு வழங்கி விட்டார்கள் என்பதற்காக சட்டம் சும்மா இருந்துவிட முடியாதே. சட்டப்படி அவர் குற்றவாளி என்பது நிருபணமாகி, உரிய தண்டனை அனுபவித்தாக வேண்டும். அவர் பதவி போன பிறகாவது அதிகாரிகள் பயப்படாமல் செயல்பட வேண்டும்.

◻ ரூ 25 பரிசு பெறுபவர் :
கே. சோமசேகர்,
5/138, வி.எஸ்.கே.என். நகர்,
காவேரிப்பட்டணம் - 635 112.

# வட்டமேஜை

✉ சென்ற இதழில் வி.ஐ.பிக்களின் தொகுதிகளில் ஆய்வு நடத்தி, அசல் நிலவரங்களைப் புகைப்படங்களுடன் நடுநிலையாக வெளியிட்டு, எந்தெந்தத் தொகுதிகளில் யார் யாருக்கு வெற்றி வாய்ப்பு என்றும் சிறு குறிப்பு கொடுத்து, அப்பப்பா... நீங்கள் கோடு போட்டாலே போதுமே..... நாங்கள் ரோடு போட்டு விட மாட்டோம்?
கடலூர், வண்ணப்பிரியன் மூர்த்தி.

✉ தேர்தல் நேரத்திலே பல பத்திரிகைச் செய்திகள் வாயிலாக, ஒரு முடிவுக்கு வந்திருந்தாலும் இன்னும் கொஞ்சம் குழப்பம் இருக்கத்தான் செய்தது. இந்நிலையில் ஸ்ரீ மகாபெரியவாளின் அருள் வாக்கை வெளியிட்டு, எங்களுக்கு வழிகாட்டி விட்டீர்கள்!
அரக்கோணம், எல்.கோபாலகிருஷ்ணன்.

✉ "மனச்சாட்சிக்கு விரோதமாகப் பொய்ச் செய்தி போடற பத்திரிகைக்காரங்க மட்டுமல்ல; அவங்க குடும்பமும் விளங்காமப் போயிடும்" என்று நெடுஞ்செழியன் பத்திரிகைக்காரர்களுக்கு சாபம் விட்டிருப்பது அதிர்ச்சியைத் தந்தது. ஒரு மாநிலத்தின் நிதியமைச்சர் பேசுகிற பேச்சா இது? 'உதிர்ந்த ரோமம்' என்று சொன்ன அதே ஜெயலலிதாவின் காலடியில் மறுபடி சரணடைந்த இவரா மனச்சாட்சி பற்றிப் பேசுவது?
மதுரை - 10, எல். முருகன்.

✉ 'மு.க.விழாவில் ஜேஜே!' தலைப்பு வெகு ஜோர். நேரடி ரிப்போர்ட் மிக அருமை.
ஊற்றங்கரை, கவி. செங்குட்டுவன்.

✉ ப. சிதம்பரம் ஜெயலலிதாவை கிடுக்கிப் பிடியாய் கேள்விகள் கேட்டுத் திணறடித்ததை, அட்டைப் படத்தில் ஜெ. கழுத்தில் கொக்கி போடுவது போல லே-அவுட்டில் காட்டி இருந்த விதம் அசத்தல்.
பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ தொண்ணூறு சதவீத தொண்டர்கள் தங்களிடமே இருப்பதாகத் தங்கபாலு கூறியிருப்பதுதான் இந்த ஆண்டின் மிகச் சிறந்த ஜோக்! சிரிப்பை அடக்க மிகவும் சிரமப்பட வேண்டியதாயிற்று!
அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

✉ கோபத்திலும் உன் முகம் அழகாக இருக்கிறது என்று மனைவியிடம் கணவன் கூறுவதுண்டு. இது கல்கிக்குக் கூடப் பொருந்துகிறது! "ஜெ. முன்னிலையில் வேட்பாளர் கூப்பிய கரங்களுடன் நிற்கிறாரே, இவர்கள் சட்டசபைக்குப் போய் என்ன பேசப் போகிறார்கள்?" என்ற கேள்விக்கு "சட்டசபைக்குப் போக இருப்பவர்களுக்குத்தானே அந்தக் கவலை!" என்கிற உமது பதிலைச் சொல்கிறேன்!
திருச்சி - 2, என். பாலு.

## கோடு போட்டாலே போதுமே...

## ரூ 20 பரிசுக் கடிதம்

✉ விஞ்ஞானி சர்.சி.வி. ராமனின் ஒளிச் சேர்க்கை பற்றிய கண்டுபிடிப்பு "ராமன் விளைவு" (Raman Effect) என்று பிரபலம் அடைந்தது. அதைப் போன்று இப்போது நமது இந்திய அரசியல் வரலாற்றில் "சேஷன் விளைவு" ('Seshan Effect') என்ற புதியதோர் சூழ்நிலை உருவாகியுள்ளது.

1991-ம் ஆண்டு வரை நடைபெற்ற பொதுத் தேர்தல்களில் ஒழுங்குமுறை என்பதே இல்லாமல் இருந்தது. ஆனால் சேஷன் தலைமைத் தேர்தல் ஆணையராகப் பொறுப்பேற்ற பின்னர், நிலைமை மாறி விட்டது. அரசியலமைப்புச் சட்டப்படி தமக்குள்ள பொறுப்புகளை நன்குணர்ந்து, அவற்றைச் செயல்படுத்த சட்டம் அளித்துள்ள விசேஷ அதிகாரங்களைப் பயன்படுத்தி, தேர்தல் விதிமுறைகளைக் கண்டிப்புடனும் முழுமையாகவும் பயன்படுத்த ஆரம்பித்தார். ஆகவே, இம்முறை 'தேர்தல் களம்' முற்றிலும் மாறுபட்ட காட்சியை அளிக்கிறது. முக்கியமாக, தேர்தல் செலவுகளைப் பற்றிய விதிமுறைகளை கண்டிப்புடன் அமல்படுத்துவதினால், முன்பு போல கண்ட இடங்களில் தேர்தல் சுவரொட்டிகள் ஒட்டுவதும், சுவர் விளம்பரங்களும் காணப்படவில்லை. பெரிய பெரிய கட் அவுட்களும், பந்தல்களும் ரோடுகளிலும், தெருக்களிலும் இல்லாத காரணத்தால் போக்குவரத்துக்கு இடைஞ்சல்களும் இல்லை. ஒலி பெருக்கித் தொல்லைகளும் மிகமிகக் குறைந்துள்ளது. இவற்றிற்கெல்லாம் காரணம் சேஷனின் கண்டிப்பான நடவடிக்கைகள்தான். இந்த நல்ல விளைவுகளை Seshan Effect என்றே கூறலாம்.
சேலம், அ.த. அழகிரிசாமி.

✉ கல்கி புத்தாண்டு சிறப்பிதழில் (14.4.96) "டூ வீலர் விற்பனை - டூமச் ஊழல்" கட்டுரையில் ப்ரீமியம் என்ற பெயரால் டீலர்களால் கொள்ளையடிக்கப்படுகிறது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. எஸ்கார்ட்ஸ் கம்பெனியின் காமராஜர் மாவட்ட டீலரான எங்கள் "ராஜா ஏஜென்ஸீஸ்" சிவகாசியில் 1993 முதல் செயல்பட்டு வருகிறது. நாங்கள் யமாஹா வண்டிகள் மற்றும் உதிரி பாகங்கள் எஸ்கார்ட்ஸ் கம்பெனியின் அனுமதிக்கப்பட்ட விலைப் பட்டியல்படிதான் இன்று வரை விற்று வருகிறோம். உலகில் எந்த காரியத்திலும், எந்தத் தொழிலிலும், விரும்பத்தகாதவர்கள் இருக்கலாம். ஒட்டுமொத்தமான தங்கள் குற்றச்சாட்டு எங்களைப் போன்ற நேர்மையான டீலர்களின் மனத்தைப் புண்படுத்தியுள்ளது.
சிவகாசி, பி. ராஜாகிருஷ்ணன்.

பல்லக்கு தூக்கிச்
சென்றேன்
எல்லோரும் அதை
பாவம் என்றார்கள்.

கடற்காற்றின் இருட்டினூடே
பரஸ்பரம் சுவாசம்
பரிமாறி
சல்லாபிக்கும் கூட்டத்தின்
நடுவே
மின் வீச்சத்தை
கவிதையாக்கி
உலகின் நிகழ்வை
பிரஸ்தாபித்தேன்.

மரணம் கொண்ட
மனிதனுக்காக
மலர்தூவி துக்கம்
கொள்பவர்
அழுகையின் சதவீதம்
எத்தனையென்று
கணிதப் புன்னகை
உயிர்ப்பித்தேன்.

வானம் முட்டும் கோபுரம்
கொண்ட
கடவுளைக் காண வருபவர்
ஊடே

கருவறைக்குள்ளே
அர்ச்சனை புரியும்
மனிதரின் நிலையை
ஊன்றிப் பார்த்தேன்.

எல்லோரும் அவரவராய்
இருந்து
என்னை மட்டும்
முரணானவன் என்கிறார்கள்;
தத்தம் இதயங்களைத்
தொலைத்துவிட்டு
என்னை
அறிவைத் தொலைத்தவன்
என்கிறார்கள்.

அடிபிறழும் பொய்களைக்
களைந்து
மனிதம் மட்டும்
மனதிலேற்றி
இப்போதும் நான் -

பல்லக்கு தூக்கிச்
செல்கிறேன்
எல்லோரும் அதைப்
பாவம் என்கிறார்கள்!

– திருவாரூர்
ஜெயகிருஷ்ணன்



ராமச்சந்திரனுக்கு என்னவோ ஆகி விட்டதென்று சல்பேட்டா கோவிந்தன் பதைத்து வந்து சொன்னான். தொட்டித் தண்ணீரில், அளவு குறிக்கப்பட்ட கண்ணாடிக் குழாய்களை முக்கி, சளக் புளக் என்று ரகளை பண்ணிக் கொண்டிருந்த ஃப்ளூயிட் மெக்கானிக்ஸ் விற்பன்னர்கள் கோஷ்டி, பரிசோதனையை விடுத்து, சல்பேட்டாவைச் சூழ்ந்தது.

சல்பேட்டா, சொல்லின் செல்வன். முதல் வரியில் விஷயத்தைச் சொன்னான்.

"ராமச்சந்திரனுக்கு போல்ட் கழண்டு விட்டது."

"என்னடா சொல்றே?"

"மெய்யாத்தான் மாமு. என்னவோ ஆயிட்ச்சி அவனுக்கு. முனி அடிச்சிருச்சின்னு நினைக்கிறேன். போப்பாண்டவர் மாதிரி பேச

"சர்தான்!"

"வந்துதே ஆத்திரம்! 'பேத்துருவண்டா, இந்த சல்பேட்டாவப் போயி யாருன்னா கேக்கறேன்' னேன்."

"சரி."

"'உன் இட்ட பெயரைக் கேட்கவில்லை. நீ யார் என்பது உனக்குத் தெரியுமா'ன்னான்."

"அட வுடுறா. காசிமேடு ஜூஜூவி ஏத்திக்கினு இருப்பான். அதான், மூளைக்குள்ள இன்னொரு மூளை ஒர்க் பண்ண ஆரம்பிச்சிருக்கும். செந்தமிழ்லயா பேசறான்?"

"ஆமாண்டா! ஔவையார் கணக்கா!"

"அப்ப சந்தேகமே இல்லை. மால்தான்!"

"இல்ல கிஷ்டா. கிட்டப் போயி மோந்து பார்த்தேன். விபூதி வாசனைதான் வருது."

"ஊதுபத்தி, பிஸ்கட் வாசனை கூட வரும். இப்பல்லாம் எல்லாத்துலயும் ஃப்ளாவர் கலக்

# ஒரு புதிய பிறவி

றான்டா!"

"சரிதான் போ. நைட் ஏதாவது பக்திப் படம் பார்த்திருப்பான்."

"இல்லடா! ஆளே மாறிட்டான். வந்து பாரு. வெள்ளை வேஷ்டி, வெள்ளைச் சட்டை, நெத்தி நிறைய விபூதி... மொட்டை அடிச்சிருக்கான்டா..."

"மூணு சீட்டுல எவன்ட்டயாவது பெட்டு

பா. ராகவன்

வெச்சி தோத்திருப்பான். அதான், இழுத்து வெச்சி சிரைச்சிருப்பான்."

"ப்ச், விளையாடாத கிஷ்டா. நான் சீரியஸா பேசறேன்."

"சரி சொல்லு."

"என்ன சொல்றது? மூணு நாளா காலேஜ் வரலை. இன்னிக்கு வந்திருக்கான். ஒர்க்-ஷாப் பாண்ட பாலன் கடை பின்னால உக்காந்திருக்கான். உடம்பு சரியில்லேன்னு காலேஜ் வராம இருந்தானே, இன்னாடான்னு கேக்கப் போனா 'நீ யார்'ங்கிறான்!"

கறான்."

"ப்ச். புரியாம பேசற. அவன் மால் எதும் ஏத்திக்கலை. என்னவோ ஆயிடுச்சி."

அதற்குமேல் நீரின் இயக்கத் தத்துவத்தை ஆராய்ந்து, ரிப்போர்ட் எழுதுவதற்கு எந்த வழுக்கைத் தலையர்கள் அமைப்பும் வாழ்த்தி, பொற்கிழி தரப் போவதில்லை என்பதால் நான் சல்பேட்டாவுடன் கிளம்பினேன்.

கூடவே தட்சிணாமூர்த்தி, பிளேடு கஜா, சென்சார் சுப்பிரமணி, தனசேகர்.

ஆய்வுக் கூடத்தை விட்டு வெளியே வந்து, நைஸாக காரிடாரில் நழுவி, எதிர்ப்பட்ட அங்கின் என்கிற வைஸ் பிரின்ஸிபாலுக்கு சலாம் வைத்து, பின்புறம் கம்பிநீட்டி, சைக்கிள் ஸ்டாண்டில் பதுங்கி, மெஷின் டிராயிங் மகானுபாவர் பார்வையில் சிக்காமல் ஒர்க்ஷாப்பை நெருங்கி, பாலன் கடையில் தஞ்சம் புகுந்தோம்.

"பாலா, ராமச்சந்திரன் இங்க வந்தான்?"

"வூட்டுக்குப் போயி முழுக்கு போட்டு கிஷ்டா. அவன் பூட்டகேஸ்."

"பாத்தியா? நான் சொல்லலை?" என்றான் சல்பேட்டா.

"நாலு டீ போடு. சொல்லு. என்ன ஆச்சு?"

"யாரோ அவனுக்கு சூன்யம் வெச்சிட்டாங்க போல."

"புரியறா மாதிரி சொல்லு. அந்த வத்திப் பெட்டிய எடு."

"என்ன பேச நான்னே புரியலை தொர. நீ, நீயில்லை; நான் நானில்லை; நாம் அவனாகாத பட்சத்தில் அது நாமாக முடியாதுன்னான் திடீர்னு. உட்டேன் ஒண்ணு, செவுள் மேல; போதை எறங்குமான்ட்டியும்னு. அழுதுட்டான்டா! எனக்கே ஒரு மாதிரி ஆயிடுச்சி."

மூன்று நாள் லீவ் போட்டதில் ராமச்சந்திரனுக்கு இன்ஸ்டன்ட் ஞானமெல்லாம் சித்தித்திருக்கும் என்று எனக்குத் தோன்றவில்லை. போன வெள்ளிக்கிழமை கூட என்னுடன் பிற்பகல் வகுப்புகளைக் கட் அடித்துவிட்டு ராமகிருஷ்ணாவில் மலையாளப்படம் பார்க்க வந்திருந்தான். இன்டர்வலுக்குப் பிறகு 'பிட்' ஏதும் காட்டாத வெறுப்பில், எழுந்து நின்று விஸிலடித்து ரகளை பண்ணிவிட்டான்.

ஞானம்?

இம்பாஸிபிள் என்று தோன்றியது.

பிற்பகல் இரண்டு மணி அளவில் எலக்ட்ரானிக்ஸ் விங் வாசலில் நான் ராமச்சந்திரனை மடக்கினேன். தோளில் கைபோட்டு வெளியே கூட்டிப் போனேன். அரச மரத்தடியில் உட்கார வைத்து, "சொல்லு, என்ன ஆச்சு உனக்கு?" என்றேன்.

"என்ன ஆச்சு? என்ன ஆகணும்? எதுவும் எதுவாகவும் ஆக முடியாமப் போறது தான் நம்ம சாபக்கேடு."

"தபார்! இந்த டகில்பாஜியெல்லாம் வேணாம். ஒழுங்காப் பேசு. நீ ஞானி இல்லை. வெறும் ராமச்சந்திரன்! நாலாவது செமஸ்டர்ல அஞ்சு பேப்பர் அரியர்ஸ் வெச்சிருக்கிற அற்பப்புழு! உனக்கும் எனக்கும் மெய்ஞானமெல்லாம் புடாபெஸ்ட் தூரம். எதனா பொம்பள கேஸ்ல மாட்டிக்கினு இருக்கியா? சொல்லிடு!" என்றேன்.

நான் சற்றும் எதிர்பாராததை அவன் செய்தான். தலையை மரத்தில் மோதிக் கொண்டு, ஓவென்று அழ ஆரம்பித்தான்.

இது ஏதடா ரவுசு என்று அவனை இழுத்து, "சொல்லு மாமு. என்ன ஆச்சு உனக்கு?" என்றேன்.

ராமச்சந்திரன் கண்களைத் துடைத்துக் கொண்டு, என்னை உற்றுப் பார்த்தான். பின் கேட்டான் :

"சொல்லு. நாம ஏன் இப்படி இருக்கோம்?"

"எப்படி?"

"எது நிலைன்னு தெரியாம, என்ன செய்யறோம்னு புரியாம, காலேஜுக்கு வர்றதும், கட்

**ஒரு கட்டத்தில் நிஜமாகவே அவன் கண்களில் ஏதோ ஒளி தெரிவதாக எனக்குப் பட்டது. சல்பேட்டாவிடம் சொன்னபோது, "சேச்சே! 'மெட்ராஸ் ஐ'யா இருக்கும்!" என்றான்.**

அடிச்சுட்டு டபிள்யூ பி.டி. வாசல்ல தவம் கிடக்கறதும், மலையாளப் படம் போறதும், சரக்கு அடிக்கறதும்... எதுலயாவது முழு சந்தோஷம் கிடைச்சுதா? அல்டிமேட் என்னன்னு தெரிஞ்சுதா? சாக்கடையில புரள்ற பன்னி மாதிரி, இலக்கில்லாம உழண்டுக்கிட்டு இருக்கோம்! பெரிய மெக்கானிக்கல் இஞ்சினீரிங் டிப்ளமா... ஒழுங்கா முடிச்சா ஆயிரத்தி எரநூறு ரூவா சம்பளம். அப்புறம் கல்யாணம். வருஷத்துக்கு ஒரு குழந்தை. ஆஸ்பத்திரி, நர்ஸரி ஸ்கூல், ரேஷன் கடை, சினிமா தியேட்டர்... இதுதானா வாழ்க்கையோட அர்த்தம்?"

"வேற என்னவா இருக்க முடியும்னு நினைக்கறே? இருக்கற வரைக்கும் கிடைக்கறதை அனுபவிக்கணும். இழுக்க, இழுக்க இறுதிவரை இன்பம். தம் அடிக்கிறியா?"

"வேணாம். விட்டுட்டேன்."

"சுத்தம். ஒண்ணும் சரியில்லை. வீட்ல எதனா திட்டினாங்களா? அரியர்ஸ் எப்படி முடிக்கப் போறோம்னு பயமா இருக்கா? ஏன் வேஷம் போடறே?"

ராமச்சந்திரன் என்னை முறைத்தான்.

"இதுவரைக்கும் போட்டதுதான் வேஷம். இனி தேடல்தான்."

"தபார்... தேடல், ஊடல்னு பூச்சி காட்டாத. மார்க்கபந்துசாமி உன் மேல பயங்கர கடுப்புல இருக்கார். ரெக்கார்ட் நோட்டுல மம்தா குல்கர்னி படம் ஒட்டி வெச்சிருக்க. இதான் தேடலா?"

"தப்பு... எல்லாம் தப்பு. இருபத்தோரு வருஷம்! பாழடிச்சுட்டேன். இலக்கில்லாத நதி மாதிரி. சூறாவளிக் காத்து மாதிரி!"

"சரிதான்."

"அன்னிக்கு நைட்டு... மூந்தாநேத்து... மொட்டை மாடில தம் அடிச்சிட்டிருந்தேன். எவனோ பிச்சைக்காரன்... குடுகுடுப்பைக் காரன்... பைத்தியக்காரனாக் கூட இருக்கலாம். பாடிட்டுப் போறான்... உன்னை அறியாமல், உன் ஆற்றல் உணராமல் தென்னை மரம் போல திசை மறைத்து வளர்ந்ததென்ன... கள்ளுப் பானையதும் கனி உதட்டு உரசலதும் கொள்ளிக்குப் பின்னால் கூட வரப் போகிறதா...?"

"அப்ப பட்டினத்தார் ஆயிட்டேன்ற?"

"யார், யாரா ஆவுறது? எல்லாமாகி இருக்கிற ஏதோ ஒண்ணு... அது என்னன்னு தெரிஞ்சிக்கறதுதான் இனி சோலி."

"நீ எக்கேடும் கெட்டுப் போ. நைட்டு தட்சிணா வீட்ல முகாம் போடறோம். அவுங்க ஆயி, அப்பன் கூடுவாஞ்சேரி போயிடறாங்க. வர்றதா இருந்தா சொல்லு."

"நான் வரலை."

"இப்ப கிளாஸுக்கு?"

"அதுக்கும் வரலை."

"அடுத்த வாரம் எக்ஸாம்டா!"

ராமச்சந்திரன் சிரித்தான்.

"நான் பிரும்மத்தைத் தேடிப் போறேன். அது எக்ஸாம் ஹால்ல கிடைக்குமா சொல்லு. வரேன்!"

எனக்கு பாலன் சொன்னதுதான் ஞாபகத்துக்கு வந்தது.

பூட்ட கேஸ்!

ராமச்சந்திரனைப் பற்றிய விஷயம் ஜி.பி.டி. முழுக்க பரவிப் போக, இதர டிப்பார்ட்மென்ட் பையன்களெல்லாம் வந்து வந்து அவனைப் பார்த்துப் போனார்கள்.

பிஸிக்ஸ் லெக்சரர் புன்னியப்பன், "ஹி ஹாட் பெட்டர் கன்ஸல்ட் எ சைக்யாட்ரிஸ்ட்" என்று கருத்துத் தெரிவித்தார்.

காலேஜ் முழுவதற்கும் தான் ஒரு காட்சிப் பொருள் ஆகிவிட்டது குறித்து அவனுக்கு ஏதும் வருத்தம் இருப்பதாகத் தெரியவில்லை.

மாறாக, பெரும்பாலான நேரங்களில், மரத்தடியில் வெறுமனே கண் மூடி உட்கார்ந்திருக்க ஆரம்பித்தான். தவிர, விவேக சூடாமணி, த்வித வல்லப புஜங்கம் என்று எழுத்துக் கூட்டிப் படிக்க, வாய் வலிக்கும் தடிமனான பழுப்புப் புத்தகங்களை உருப்போட ஆரம்பித்தான்.

"தபார் ராமச்சந்திரா! பிரும்மத்தை புஸ்தகத்துல தேடற மொத ஆளு நீதான்!"

பதில் சொல்ல மாட்டான். தவிரவும் குண்டலினி, ராஜயோகம், சூரியனைக் கைக்கொள்ளுதல் என்று பெரும்பாலும் யாருக்கும் புரியாதவைகளாகவே பேசத் தொடங்கினான்.

ஒரு கட்டத்தில் நிஜமாகவே அவன் கண்களில் ஏதோ ஒளி தெரிவதாக எனக்குப் பட்டது. சல்பேட்டாவிடம் சொன்னபோது,

"சேச்சே! 'மெட்ராஸ் ஐ'யா இருக்கும்!" என்றான்.

அட்டன்டென்ஸ் ஷார்டேஜ் என்று




ஸ்ரீ அன்னையே துணை

# KANMANI AGRO GOLD FARM

9, 10 TH AVENUE, ASHOK NAGAR, MADRAS - 600 083. TEL: 482 43 79

**[A KANMANI GROUP OF COMPANY]**

CATERING CASH CROP CULTIVATION
LIKE VEGETABLES, FRUITS & FLOWERS

## ACCEPTS FIXED DEPOSITS

*STRICTLY UNDER 45 S. CHAPTER III C OF RBI ACT OF 1934*

| PERIOD | 1 YEAR | 2 YEARS | 3 YEARS |
|---|---|---|---|
| INTEREST PAID QUARTERLY | @ 24% P.A. | 24% P.A. | 24% P.A. |
| INCENTIVE PAID INITIALLY | 3% | 6% | 9% |
| SPL. INCENTIVE FOR DEPOSITORS OF RS. 10,000/- AND ABOVE | - | - | 3% |

*Plus Attractive Gifts for all Depositors.*



"என் பையன் டாக்டராத்தான் வருவான்னு எப்படி சொல்றீங்க?"
"ஜனவரி, பிப்ரவரி, மார்ச்சுவரின்னு எழுதியிருக்கானே."
- வெ. ராஜாராமன்

அவனை ஃபைனல் செமஸ்டர் எழுத அனுமதிக்க மறுத்து விட்டார்கள்.

"மாமு. இப்பவும் ஒண்ணும் கெட்டுப் போகலை. தேசிகருக்கு அம்பது ரூபா தள்ளிடு. தொண்ணூத்தொம்பது பர்ஸெண்ட், அட்டண்டென்ஸ் காட்டிடுவான்."

ராமச்சந்திரன் மறுத்துவிட்டான். இந்தப் பரீட்சை, பட்டம் எதும் தனக்குத் தேவையில்லை என்று சொன்னான்.

"இருஷ்ணா! என் நடவடிக்கைகள் பைத்தியக்காரத்தனமாப் படலாம். ஆனா நான் பைத்தியம் இல்லை! என் இலக்கு தெளிவா இருக்கு. பாண்டிச்சேரி போய் அரவிந்தர் ஆசிரமத்துல சேர்ந்துடப் போறேன். இல்லை, ராமகிருஷ்ணா மட்! எனக்குத் தெரிஞ்சாகணும்! அது அல்டிமேட்? எதை அடைஞ்சுட்டா அப்புறம் எதுவும் தேவை இருக்காது? எது நாம்? அல்லது யார் நாம்?"

நிஜமாகவே அவனுக்குப் பைத்தியம்தான் பிடித்து விட்டதாக எனக்குத் தோன்றியது.

பிறகு அவனை நாங்கள் சந்திக்கவில்லை. பரீட்சை எழுதாமல், டி.ஸி. வாங்காமல், ஏகப்பட்ட அரியர்ஸ் சொத்தோடு என்ன ஆனான் என்று தெரியவில்லை.

போன வாரம் லஸ் பிளாட்பாரக் கடையில் மேய்ந்து கொண்டிருந்தபோது, எதேச்சையாக ராமச்சந்திரனைச் சந்தித்தேன்.

காட்! ஆறு வருடங்களில் எப்படி மாறிப் போயிருக்கிறான்!

மிகவும் மெலிந்து, கண்கள் குழிவிழுந்து, பழுப்பு நிற ஜிப்பாவும் பத்துநாள் தாடியும், காடு மாதிரி தலைமுடியும், தேய்ந்த செருப்பும்...

"டேய், ராமச்சந்திரா!"

தோளைத் தொட்டதும் திரும்பினான். உற்றுப் பார்த்து, கண்டு கொண்டான்.

"இருஷ்ணா...!"

எப்படி இருக்கிறாய் என்று கேட்க வாயெடுத்தேன். அபத்தமாகப்பட்டது. நிச்சயம் இவன் நன்றாக இல்லை...

"நீ என்னடா பண்றே?"

மூவாயிரத்தி எழுநூறு சம்பள உத்தியோகத்தைச் சொன்னேன்.

பிற்பகல் வெயில் உக்கிரமாக இருந்தது.

"வா, ஏதாவது கூல் டிரிங்க் சாப்பிடுவோம்."

"இல்லை... சாப்பாடே சாப்பிடணும்..."

"சரி, வா."

முருகனில் நுழைந்து, உட்கார்ந்தோம்.

"சொல்லு, என்ன பண்றே நீ?"

அவன் பேசாதிருந்தான்.

"வேலை ஏதும் கிடைக்கலியா?"

அவன் சட்டென்று என் கைகளைப் பிடித்துக் கொண்டான்.

"போச்சுடா! எல்லாம் போச்சு! என்னைப் பைத்தியம்னே முடிவு பண்ணி, மெண்ட்டல் ஆஸ்பத்திரி வரைக்கும் இழுத்துட்டுப் போயிட்டாங்க, என் வீட்டுல. ராவோட ராவா ஓடி வந்துட்டேன். எத்தனை அலைச்சல்! எத்தனை அவமானம்! எத்தனை ஆசிரமங்களுக்குப் போனேன்! மத்தியப் பிரதேசத்து பலார்ஷா வரைக்கும் போய்ச் சுத்தினேன்... இங்க துறவிகளுக்கு நடுவுல கூட பாலிடிக்ஸ். பணம். சுத்தி, சுத்தி, சுத்தி..."

சட்டென்று அவனைக் கைகாட்டி நிறுத்தினேன். சர்வர் தட்டுகளை வைத்துவிட்டுப் போனான்.

"சாப்பிடு, முதலில்."

அவன் பேயாகத் தின்ன ஆரம்பித்தான். வாய் முழுக்க சோறோடு, "நாழு நாழா முழுப் பழ்ழினி" என்றான்.

அவன் கஷ்டப்பட்டு அழுகையை அடக்கிக் கொள்வது தெரிய, எனக்குச் சங்கடமாக இருந்தது.

"பேசாம சாப்பிடுடா" என்றேன். ஒரு வேள்வி மாதிரி உண்டு முடித்தான்.

"இருஷ்ணா, நாம நினைக்கறது ஒண்ணும் நடக்கறது ஒண்ணுமா இருக்கறதுக்குப் பேர்தான் வாழ்க்கையோன்னு இப்பல்லாம் எனக்குத் தோணுது. அந்த சுவாரஸ்யத்தை விலகி நின்னு ரசிக்கிற மனநிலை பெரும்பாலும் யாருக்கும் இருக்கிறதில்லை."

இத்தனைக்குப் பிறகும் அவன் மாறாதது எனக்கு ஆச்சர்யமாக இருந்தது. நாக்கு துடிக்க, சட்டென்று கேட்டுவிட்டேன்.

"அதுசரி, பிரும்மத்தைத் தேடி மத்தியப் பிரதேஷ் வரைக்கும் போனதாச் சொன்னியே, கிடைச்சுதா?"

என் கிண்டல் அவனுக்குப் பொருட்டாக இல்லை.

கண்கள் பளபளக்க என் கையைப் பற்றிக் கொண்டு,

"தெரிஞ்சுது! பசிதான்டா பிரும்மம்!" என்றான்.

# ஆ....ஹா ஹா ஹா..!

கல்வி அமைச்சர்

"கொஸ்டின் பேப்பர் அவுட் ஆகற பாரம்பரியம் மட்டும் இல்லைன்னா... நாமெல்லாம் டிகிரி முடிச்சிருக்க முடியுமா...!"

சி.பி.ஐ. அலுவலகம்

"போலி கையெழுத்து குற்றச்சாட்டுலேருந்து அவரைக் காப்பாத்த நாம உடனடியா சில ஆவணங்களை ரெடி பண்ணணும்..."

"அடுத்து, வாதத்துக்கு வர்றது, தேசிய அளவுல முக்கியமான ஒரு வழக்குன்னு நினைக்கறேன். ஏன்னா, குற்றம் சாட்டப்பட்டவர், அவர் பேரிலுள்ள குற்றப் பத்திரிகை, ஆவணங்கள், ஆய்வு அறிக்கை எல்லாமே காணாமல் போயிருக்கு..."

காவல் நிலையம்

குற்ற விகிதாசாரம்

"குற்ற விகிதத்தைக் குறைக்கறது ரொம்ப சுலபம்... கம்ப்ளெய்ண்ட் குடுக்க வர்றவங்களைக் 'கவனிக்க' அனுப்பிட வேண்டியது தான்..."

இந்தியன் ஃபீச்சர்ஸ் ஸிண்டிகேட்

# ஆகாயச் சிறகுகள் 5

**பா**ல்ச்சாமி பெண் பார்க்க ரெண்டு வேன் நிறைய ஆட்களுடன் வந்திருந்தான். அந்தக் கிராமம் வேனையே வருசத்திற்கொரு தடவைதான் கண்கொண்டு பார்க்கும் போலும்!

வேனையே வேடிக்கை பார்த்தனர். பட்டன் இல்லாத டவுசரை ஒரு கையால் பிடித்துக் கொண்டு தெருப்புழுதியில் விளையாடித் திரிகிற பொடிப் பையன்களெல்லாம் வேனைச் சுற்றிச் சுற்றி வந்தனர். தொட்டுத் தொட்டுப் பார்த்தனர். வேனில் படிந்திருந்த புழுதிப் படலத்தில் கோணல்மாணலாய் 'முனியாண்டி' என்று ஒரு பையன் தன் பெயரைப் பொறித்திருந்தான்.

**அளவெடுத்துச் செய்த வீச்சரிவாள் மாதிரியிருந்தாள் பிரேமா. சம்மதம் சொல்லிவிட்டான், பால்ச்சாமி.**

பெண்வீடு ரொம்ப ஏழ்மையான வீடு. கன்னங்கரேலென்று கறுத்துப் போன கூரை வீடு. அதிலும் முகடு இழிந்து, கட்டை எலும்புகள் பல்லையிளித்தன. வெளியே சின்ன, சாய்வான தாழ்வாரம் ரெண்டு. வாசலில் இருபக்கமும். ஒரு தாழ்வாரத்தில் திண்ணை. மறு பக்கம் எருமைமாடு கட்டுகிற சாய்ப்பு.

வந்த ஆட்கள் உட்காரக் கூட வீட்டுக்குள் இடமில்லை. ஒரே வேக்காடு. ஜன்னல் இல்லாத இறுக்கமான குடிசை. திண்ணையிலும் பெண்கள். வேற்றுப் பெண்கள் வாசத்தில் எருமைமாடு மிரண்டு, 'தறியமுறிய' விழுந்தது.

சுமாரான அலங்காரத்திலும், பயங்கரமான நாணத்திலும் பிரேமா வந்தாள். சந்தை மாடுமாதிரி பார்வைக்கு நிறுத்தப்பட்டிருக்கிற லஜ்ஜை... கூச்சம்... அவமான அவஸ்தை. 'இப்படிப் பொட்டச்சி ஜெம்மமா பெறந்து தொலைச்சிட்டமே...' என்ற மனக்குமைச்சல். வாடிப் போயிருந்தாள்.

உள்மன வேதனை, உணர்ச்சிகள், கவிழ்ந்திருந்த முகத்தில், வியர்வைப் பொடித்து, துளிகளாகப் பூத்திருந்தன.

பால்ச்சாமி பார்த்தான். நல்ல கறுப்பு. அண்டங்காக்கா கறுப்பில்லை. அட்டக் கரியில்லை. பவுடர் பூசின மாதிரியான வெளிர்க் கறுப்பு. லட்சணமான கறுப்பு. அவளைப் பார்த்த முதற் பார்வையில் அவனைக் கவர்ந்தது– செழுமையான கன்னக் கதுப்பும், குவிந்தமைந்த கச்சிதமான கனிந்த உதடுகளும்தான்.

ரொம்பக் குச்சியாகவுமில்லாத – குண்டாகவுமில்லாத, லட்சணமான திரேகம். காட்டு உழைப்பில் குழை விழுந்த கட்டுத் திரேகம். முகத்தில் பரவியிருந்த பயமே, ஓர் அழகாகத் தோன்றியது. மயிலின் சாயலாக – கறுப்பு மின்னலாக – இருந்த அந்த ஒயில்.



## மேலாண்மை பொன்னுச்சாமி

அளவெடுத்துச் செய்த விச்சரிவாள் மாதிரியிருந்தாள் பிரேமா. சம்மதம் சொல்லிவிட்டான், பால்ச்சாமி.

அவன் சொன்ன சம்மதத்தில், அவனது வீட்டாட்கள் அதிர்ச்சியாகத் திணறினர். அவர்களுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை.

'செக்கச் செவேலென்று சிமைராஜா மாதிரியிருக்கிற நம்ப பால்ச்சாமிக்கு இந்தக் 'கருவாய்ச்சி' ஒரு பொண்ணா? சடா? பால்ச்சாமி வாயைத் திறந்து சரி சொன்னால் தக்காளிச் சிவப்பில், நகை நட்டு சீர்வரிசைகளோடு வரிசையில் வந்து நிற்குமே..' என்ற நினைப்பில் வீட்டாட்கள்.

"ஏலேய்... இப்படிப் பாழுங் கெணத்துலே கண்ணைத் தொறந்துக்கிட்டுப் போய் வுழுறியே..." என்கிற மாதிரி பால்ச்சாமியை 'விரட்டி விரட்டிப்' பார்த்தார்கள். பார்வைகளிலேயே பொருமலையும் குமைச்சலையும் கொட்டினார்கள். தங்களுக்குள்ளேயே 'குசுகுசு' வென்று பேசிக் கொண்டனர். பிரேமாவை பிடிக்காமல் 'வெடுக், வெடுக்' கென்று பார்த்தனர். பார்த்த பார்வைகளிலெல்லாம் கொப்பளித்த வெறுப்புணர்ச்சி.

பிரேமாவுக்குள் பகீரென்றது. அடிவயிற்றில் பயக் கலக்கம். 'சம்மதித்த பால்ச்சாமியை கலைத்து விடுவார்களோ...' என்ற பதற்றம்.

பிரேமாவுக்கும் பால்ச்சாமியை ரொம்பப் பிடித்து விட்டது. தேன்நிறம், ஒல்லியான- ஒடிசலான- தோற்றம். சற்று சதை பிடித்தால் லட்சணமாகி விடுவான். முகத்தில் அறிவுக் களை. யோக்கியமான மனசின் நிறைந்த அன்பு. கண்களில் ஒளியாக முகம் காட்டுகிற வசீகரம்.

அவளது ஆத்மா, அவனது கையைப் பற்றிக் கொண்டது. 'உதறிக் கொண்டு போய்விடக்





"என்னப்பா போன்?"
"யாரோ உயிரியல் பேராசிரியராம் சார். நம்ம ஓட்டல் சாப்பாட்டிலேயிருந்து புது உயிரினம் ஒண்ணு கண்டுபிடிச்சு அவார்டு வாங்கியிருக்காராம். நன்றி சொல்றார்."
—வெ. ராஜாராமன்

கூடாதே' என்று பிரார்த்தித்தது. பால்ச்சாமியின் உறவுக்காரர்களைப் பதைப்புடன் பார்த்தான்.

நகைநட்டு பேச்சு வந்தது. 'இதில் 'இடக்கு மடக்காகப்' பேசி, இந்தச் சம்பந்தத்தைக் குலைத்து விட்டுவிட வேண்டியது தான்' என்ற தந்திரத்தில், தொண்டையைச் செருமித் தயாரானார்கள். போட்டிருந்த சம்மணக்காலை அசைத்துக் கொண்டு ஆயத்தமானார்கள். அதையும் கவிழ்த்துவிட்டான் பால்ச்சாமி.

"உங்க நகையை நம்பி எங்க பொழைப்பு இல்லே. ஏங்கல்யாணத்தை உங்க ரொக்கத்துலே செய்ற அளவுக்கு நாங்க ஒன்னும் வக்கத்தவுக இல்லே. உங்க மகளுக்கு நீங்க பாசத்தோட என்ன செய்ய நெனைக்கிகளோ... அதைச் செய்யுங்க, போதும். நாங்க ஏங்கல்யாணச் செலவைப் பாத்துக்கிடுதோம். அம்புட்டுத்தான் பேச்சு."

வெட்டிக் கத்திரித்த மாதிரியிருந்தது, பால்ச்சாமியின் பேச்சு. மணிகொண்டு அடித்த மாதிரி 'கணீர் கணீ'ரென்று நர்மமாய் ஒலித்தது. அவனது உறவுக்காரர்களெல்லாரும் கொதி பாலில் குளிர் நீர் விழுந்த மாதிரி... திகைத்துப் போய், சத்தமிழந்து நின்றனர். வாயடைத்துப் போன திகைப்பு. அடுத்த முஸ்தீபுகளுக்கு வழியற்றுப் போன திகைப்பு.

பால்ச்சாமி குணமே அதுதான். யார் சொல்லியும் காது கொடுக்க மாட்டான். வில்லிலிருந்து புறப்பட்டுவிட்ட அம்பு மாதிரித்தான் வழிநழுவாத விறைப்போடு பாய்வான். பின் வாங்கமாட்டான். தீவிரத்தையோ, வேகத்தையோ குறைக்க மாட்டான்.

அவன் வைத்ததுதான், அவன் வீட்டில் சட்டம். இஷ்டமோ, இல்லையோ அதுவேறு. ஆனால் அவன் சட்டம் தான் வீட்டின் நடைமுறை. ஒற்றைப் பிள்ளை. மொத்தச் சொத்தின் ஏக வாரிசு. ஏகப்பட்ட புஸ்தகம் வாசித்தவன். பலபேருக்குத் தலைவனாக நின்று, நல்லது கெட்டதுகளை எடுத்துச் சொல்லி வழி நடத்துகிறவன். மேடையேறி மைக்கில் நின்று மழை பெய்கிற மாதிரி 'சோ'வென்று பேசுகிறவன். அயல்தேச விவகாரங்களிலிருந்து, உள்ளூர்ச் சாக்கடை வரைக்கும் அனைத்தையும் அலசுகிறவன்.

அப்பேற்பட்டவன்... வீட்டாட்கள் சொல்லித் தலைவணங்குவானா? ஆக...

அன்றைக்கே கல்யாணம் நிச்சயமாயிற்று.

நிச்சயம் செய்து, முகூர்த்த தேதி நிர்ணயித்து, 'பூ' வைத்து விட்டு, இரண்டு வேன்களும் புழுதியைக் கிளப்பிக் கொண்டு போய் விட்டன. வேனுக்குள் அடைத்துக் கொண்டு மனிதர்கள் வெக்கை.

உணர்ச்சிகளின் வெக்கை. எல்லார் மனசுகளிலும் இறுக்கம். யாரையும் மதிக்காமல் தானடித்த மூப்பாகக் காரியம் செய்து விட்டானே என்கிற ஆதங்கம்.

உள்மனக் குமைச்சல்கள். முகத்தைத் திருப்பிக் கொள்கிற சிறுசடைப்புகள். கோப தாபமான பேச்சுக்குதறல்கள். உறுமலான முணுமுணுப்புகள். புலம்பல்கள். வருத்தப் பெருமூச்சுகள். சோகமான மூக்குச் சிறல்கள்.

இதே போலப் பிரேமா வீட்டிற்குள்ளும் ஏகமாய் ரகளை. பிரேமாவின் அண்ணன், ஒத்தைக் காலில் ருத்ர தாண்டவம் ஆடினான்.

"இந்த ஆளுக்கு நம்ம தங்கச்சியைத் தரவே கூடாது."

அவன் சொல்லில் ஏதோ ஒரு நியாயம் புதைந்து கிடப்பதாக உள்ளுணர்வாக உணர்ந்த பெற்றோர் மௌனமாக யோசித்தனர்.

"சொத்து இருக்கு. வீடு காடு இருக்கு. இருந்து என்ன செய்ய? இதுகளை வைச்சுக் காப்பாத்தத் தெரியுமா? அதுக்குத் தேவையான திறமை இருக்கா? ஆர்வம், அக்கறை இருக்கா? ஒன்னுமில்லே. 'கட்சி, கட்சி'ன்னு ஊர்க்காடு சுத்தத் தெரியும். மைக்கைக் கண்டுட்டா... தண்ணி குடிக்காமப் பேசத் தெரியும். வேறென்ன தெரியும்?"



"உங்க மாமியார் யாரோட சண்டை போட்டுக்கிட்டு இருக்காங்க...?"
"சண்டை போடணும்னு தோணும் போதெல்லாம் கண்ணை மூடிக்கிட்டு ஏதாவது ஒரு நெம்பர் போட்டு, சண்டை போடுவாங்க..."
- ஆ.மு.ரா.

பிரேமாவுக்குள் குலை நடுக்கம். 'மழையி லிருந்து நனைய விடாமல் காப்பாற்றி விட் டோமே' என்ற ஆறுதல் முகம் காட்டுவதற்குள், மானை அள்ளிக் கொண்டு போகிற சூறாவளி, இத்திசையில் எழுந்து விட்டதே.

"போட்டதைப் போடுன்னு சொன்னா... யோக்கியன்னு அர்த்தமா? அக்கறையத்துப் போய் எதையும் ஆக்கத் தெரியாம மலட்டுத் தனமாயிருக்கிற இவருக்கு, எவன் பொண்ணு தருவான்? அதான்... 'போட்டதைப் போடு'ன்னு... யோக்கிய வேஷம் கட்டிட்டுப் போறாரு?"

பிரேமாவின் அம்மா குரல் சிற்றமாக வெடித்துச் சினந்தது.

"ஏலேய்... வாயை மூடுடா... நாயி."

"துரியோதனங் கூட்டத்துலே தப்பிப்போய் ஒரு தருமரு வந்துட்டா... தருமர்னா ஒத்துக் கிடுவீக? தர்மவேசம் போடுற கபடக்காரன்னு தானே சொல்லுவீக? கெட்டழிஞ்சு போன இந்த மனுசக் குப்பையிலே ஒரு நல்ல மனுசன் பொறந்தா, ஒத்துக்கிடவா செய்வீக? ஏமாளி... ஏலாதவன்... இளிச்சவாயன்னு தானே பட்டம் கட்டுவீக?"...

"என்னம்மா சொல்லுதே? ஒனக்கென்ன அறிவு கெட்டுப் போச்சா...?"

"அறிவோடதான் பேசுதேண்டா... இந்தக் கல்யாணம் நடக்கும். நடக்கட்டும்."

"எதுக்கு? எல்லாச் சொத்தையும் 'இருந்து' இன்னு தொலைச்ச பெறகு... ஏந்தங்கச்சி தெருவுலே நின்னு பொலம்பவா?"

"ஏன்? ஒந்தங்கச்சி கெட்டிக்காரியா யிருந்தா... புருஷனை கைக்குள்ளே போட முடியாதா? வசக்கி கட்டுப்படுத்தக் கூடாதா? 'ஊரு, கட்சி'ன்னு அலையுற மாப்பிள்ளையை... 'வீடு, புஞ்சை'ன்னு திரியுற மாதிரி அக்கறை யாக்க முடியாதா? அட... முடியாமத்தான் போகுதுன்னு வைச்சுக்கோ. என்ன குடி முழுகிப் போகப் போவுது? ஒந்தங்கச்சியே, புருஷன் வீட்டுச் சொத்தை கட்டிக்காத்து வளர்த்துர முடியாதா...?"

அம்மாவின் சிற்றம்... அனலும் அறிவுமாய் பறந்த வார்த்தைகள்... பிரேமா நெஞ்சுக்குள் வேதவார்த்தைகளாகப் பதிந்தன.

சண்டையும் சச்சரவுகளும் வீடுகளில் நடக்க, கல்யாணமும் நடந்து முடிந்தது.

திருமணம் முடிந்து, மாப்பிள்ளை விருந்து முடிந்து... மறுவீடு போவதற்குள்...

ரெண்டு குடும்பங்களுக்குமிடையில் பெரும் சண்டையாகி 'கைகலப்பு வரை போய்விடுமோ' என்று பயம் வர... ஊர் கூடி, பஞ்சாயத்துப் பேசி...

பால்ச்சாமிக்கான காடுகரைகளோடும், தனியான வீட்டோடும், கூடச் கூட தனிக் குடித் தனம் போய்விட்டான்.

கல்யாணத்தின் போதே, பால்ச்சாமியின் பிராபல்யம் தெரிந்தது. இதுவரைக்கும் இந்தக் கிராமத்தில் எந்தக் கல்யாணத்திற்கும் இத் தனை கூட்டம் வந்ததேயில்லை. அப்படியொரு கூட்டம்.

சைக்கிள்களிலும், பைக்களிலும் வந்த வண்ணமேயிருந்தது. வாலிபர்கள் கூட்டம். வந்த ஜனத்தைத் தாள முடியாமல், கிராமம் திணறித் தத்தளித்தது. கடைகளில் பீடி சிகரெட்டுக்குக் கூடப் பற்றாக்குறை.

தாலிகட்டிய பிறகு வாசித்துத் தந்த வாழ்த்துப் பத்திரங்களும், பரிசுப் பொருள் களும் ரெண்டு வண்டிக்கு இருக்கும். வாசிப்பும், அறிவிப்புகளுமே ஒன்றரை மணிநேரம் நடந்தது.

"குடும்ப அக்கறை" இல்லாத அவனின் ஊர்ச் செல்வாக்கும் அந்தஸ்தும், பிரேமாவின் மனசுக்குள் இனம் புரியாத படபடப்பை உரு வாக்கியது.

"தோழர், தோழர்..." என்று அவன் கையை குலுக்கிய நூற்றுக்கணக்கான இளைஞர்கள். அதிலிருந்த பாவனையற்ற அசல்தன்மை. ஆத்மார்த்தமான தோழமை.

வார்த்தையாக்கிச் சொல்ல முடியாவிட் டாலும்... பிரேமா மனசால் உணர்ந்தாள். பிர மித்தாள்.

ஆத்மார்த்தமாய் அவனது காலடியில் சரணடைந்தாள். சரணடைந்த அவளுக்கும் ஆத்ம நெருக்கடிகள் வரும் என்று கண்டாளா பிரேமா?

(தொடரும்)



"நேத்து என் கனவுல ரஜினி வந்தாரு!"

"அரசியலுக்கு நேரடியா வருவாரா, கட்சி ஆரம்பிப்பாரான்னு கேட்டியா?"

"கேட்டேன்.. பலபேர் கனவுல தோன்றி ரொம்ப டயர்டா இருக்கு. அடுத்த கனவுல வர்றப்ப பதில் சொல்றேன்னாரு!"

—அம்பை தேவா



# ஒன்று அறிந்தோம்

சிக்னலில் கார் நின்றபோது பக்கத்து வண்டியிலிருந்து மோகனம் மனசுக்குள் புகுந்து பரவியது. கார் ஓட்டிய பெண், ஸ்டீயரிங்கின் மேல் தாளம் போட்டுக் கொண்டிருந்தாள். ரஞ்சனி மாதிரி...

ரஞ்சனி... ரஞ்.... மாதிரியென்ன.... ரஞ்சனியேதான்! கற்றையான ஒற்றைப் பின்னல் நீண்டு கிடந்த இடத்தில் இப்போது குதிரை வால். முன்நெற்றியில் மட்டும் வழக்கம் போல் விளையாடிய அடங்காப்பிடாரி சுருள்கள்...

வசந்தி தன்னையறியாமல் தன் பின்னலை முன்னுக்கு இழுத்து, தொட்டுப் பார்த்துக் கொண்டாள்.

'ரஞ்சனி...!' கார் ஜன்னல் வழியே கூப்பிட வேண்டுமானால் ஸ்டீரியோவின் மோகனத்துக்கு மேலாகக் குரல் எழுப்ப வேண்டும். யோசித்து முடிவெடுப்பதற்குள் விளக்கு பச்சைக்கு மாற, ரஞ்சனியின் மாருதி பறந்து விட்டது.

''நம்ம பாப்பா மாதிரி தெரியுது...?'' - டிரைவர் மாணிக்கம் கேட்டார்.

''உம்...''

'தலைமுடியை ஏன்மா இப்படி...?'

- மாணிக்கம் அடுத்த கேள்வியாகக் கேட்டால் என்ன பதில் சொல்வது...?

அவர் கேட்கவில்லை. அவர் பார்க்க வளர்ந்த 'பாப்பா'வின் நீக்கு - போக்கு, அவசரம் - அடாவடி அத்தனையும் அறிந்தவர்.

ரஞ்சனியிடமிருந்து தான் ஒளித்து மறைத்ததையெல்லாம் ஊட்டி வளர்த்தவர்.

வசந்தி பெருமூச்சு விட்டாள்.

தான் பட்ட வருத்தங்கள் ரஞ்சனிக்கு வேண்டாம் என்று முடிவு செய்தது அறியாமை தான்... ஒருவகையில் அகம்பாவமும் கூட... சமுத்திரத்தை சங்குக்குள் அடங்கிக் கிடக்கச் சொல்வது மாதிரி... கல்யாணி ராகத்தை ஒரு குட்டி கீர்த்தனைக்குள் சிறை வைத்துவிட எண்ணுவது மாதிரி...

வசந்தியை ஏமாற்றி விட்டு ரஞ்சனி முதன் முதலாகப் பாடியது கல்யாணிதான். கொல்லைப் பக்கத்து தென்னைமர நிழலில் டிரைவர் மாணிக்கம் மடியில் வைத்துக் கொண்டிருந்தார்.

''கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த தரு நிழலே...''

- மாணிக்கம் எப்போதும் கரடு முரடாக காம்போதியில்தான் பாடுவார்.

''மாமா! நீ பாடாதே! நானே பாடுவேன்...'' ரஞ்சனி தன் சின்னக் கையால் அவர் மீசை பூசிய வாயை எம்பிப் பொத்தினாள்.

''கோடையிலே இளைப்பாற்றி.... கோடையிலே இளைப்பாற்றி....'' ஐந்து வயதுக்குரிய மழலை. வார்த்தை 'இளைப்பாற்றி'யைத் தாண்ட முடியாமல் நின்றது. ஆனால் ராகம்...? ஒரு ஆயுள்காலத்துக்கும் கேட்டுக் கேட்டு நெஞ்சுக்குள் வாங்கி, பூட்டி வைத்து, திடீரென்று திறந்து விட்டதுபோல் ஒலித்தது அந்தக் கல்யாணி.



யும் ஒருவன் வாட்டமுறச் செய்வானேன். வேண்டாம். தான் பாடி அவள் சங்கீதம் அறிய வேண்டாம்.

அந்த வைராக்கியத்தில் ஒரு கூடுதல் திருப்தியும் இருந்தது :

மேடையில் பாடுவதைத் தடுத்தவனுக்கு வீட்டில் அந்த விருந்தளிப்பை மறுத்த குரூர திருப்தி. அவனும் தன்னுடைய உணர்வுப் பட்டினியை அனுபவிக்கட்டுமே....

ஆனால் அவனுக்கு அது ஒரு பொருட்டாகப்படவில்லை. நஷ்டம் பாஸ்கரனுக்கில்லை; தனக்குத்தான் என்று உணர்வதற்குள் ரஞ்சனி உருவாகியிருந்தாள்.

ஒலிக்காத காம்போதியையும் கேட்காத கல்யாணியையும், அம்மாவிடமிருந்து ஒற்றியெடுத்துக் கொண்டது போல் ரஞ்சனி பாடினாள். அப்போது அவளுக்கு ஐந்தே வயது.

"Child prodigy" என்று பாஸ்கரன் கொண்டாடினான். பரமேஸ்வர அய்யரிடம் அழைத்துப் போனான்.

"அம்மாவோட ஞானமும் குரலும் அப்படியே வாய்ச்சிருக்கு..." - உருகிப் போனார் பெரியவர்.

'அவர் கண்கள் பனித்தது ரஞ்சனியின் பாட்டைக் கேட்ட நெகிழ்ச்சியில் மட்டும் தானா..?' பாஸ்கரனின் வற்புறுத்தலுக்காக உடன் சென்ற வசந்திக்கு சந்தேகம் வந்தது.

ரஞ்சனி கச்சேரி மேடை ஏறியபோதோ பொறாமையே வந்தது!

தன் உணர்ச்சிகளின் பயமுறுத்தல் தாங்க முடியாமல் அழுதபோது ரஞ்சனிதான் அவளைத் தேற்றினாள்.

''எல்லாம் எனக்குத் தெரியும்மா.... பரமேஸ்வரன் சார் சொல்லியிருக்கார். நீ எப்படிப் பாடுவே, தொடர்ந்து பாடியிருந்தா எப்படியெல்லாம் வந்திருப்பே... எனக்கு ஒண்ணே ஒண்ணுதான் புரியலை..."

"என்ன...?"

"அப்பாவை எதிர்க்க உனக்கு ஏன் துணிவு இல்லை...?''

"ரஞ்சனி... அது கால் நூற்றாண்டுக்கு முந்தின சமாசாரம். இப்ப மாதிரி 'இண்டிபெண்டெண்டா' அப்பல்லாம் இருக்க முடியாது..."

''ஏன்மா... 'இண்டிபெண்டெண்ட்'னா ஏதோ கெட்ட வார்த்தை மாதிரி உச்சரிக்கறே...?"

சவுக்கடி பட்டது போல் இருந்தது 'வசந்திக்கு.

சமாளித்து, நிமிர்ந்து கேட்டாள் :

மாடி வெராண்டாவிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த வசந்தி பிரமித்தாள். கல்யாணி ராகம் இந்த வீட்டில் ஒலித்து ஏழு வருடங்களுக்கு மேல் ஆகிவிட்டது. கல்யாணி மட்டுமா..? தம்பூராவைக் கண்ணாடி அலமாரியில் வைத்துப் பூட்டிய அந்த 'வைராக்கிய' தினத்துக்குப் பிறகு மனசு கூட, பாட மறுத்தது.

பாஸ்கரனுக்குப் பிடிக்கவில்லை... கல்யாணி பிடித்திருந்தது. கல்யாணியும் காம்போதியும் சங்கராபரணமும் வலஜியும் சாருகேசியும் எல்லா ராகங்களும், பாட்டுகளும், பதங்களும் தில்லானாவும் திருப்புகழும்... எல்லாமே பாஸ்கரனுக்குப் பிடித்துத்தானிருந்தது; அவன் அவற்றை மேடையில் பாடுவது மட்டும் பிடிக்கவில்லை.

"இது என்ன வேடிக்கை? பாட்டு வேறு, பாடுபவர் வேறா...? அப்படி இருவேறாக இருந்தால் இத்தனை மேடைகள், இத்தனை வாய்ப்புகள், இத்தனை மாலைகள், பாராட்டு... பெற முடியுமா...?"

"இந்த அத்வைதமெல்லாம் என்கிட்டே பேசாதே.... வேண்டாம்னா வேண்டாம்!"

எதிர்க்கத் துணிவில்லை.

தன்னைப் போல் ரஞ்சனியும் துவள வேண்டி வருமோ? மலர்ந்த பூவை மீண்டும் மொட்டாகி அடங்கு என்பது போல் அவளை

**சிஷ்யா**




- காவேரிப்பட்டணம் சோமசேகர்

"உங்கப்பாகிட்டே கேட்கிறதுதானே... அவர் ஏன் அப்படி நடந்துண்டார்னு...?"

"ஒரு வருஷம் முன்னாடியே கேட்டுட்டேன்.... 'தப்புதான்... ஆனால் என்னால அதை ஏத்துக்க முடியலை... உங்கம்மா மேடையிலே பாடறதை, அதை எல்லாரும் ரசிக்கறதை... அவளையும் சேர்த்து ரசிக்கறதை...' அப்படின்னார்... 'ரொம்ப கேவலமா பேசறீங்கப்பா'ன்னு சொல்லிட்டேன். அதுக்கு அவர் என்ன சொன்னார் தெரியுமா...?"

"......................"

" 'இருக்கலாம். ஆனா அதுதான் உண்மை'ன்னார்... நீயும் உண்மையாயிருந்திருக்கணும். மனசை விட்டு அவர்கிட்டே பேசியிருக்கணும். என்னைக்காவது நீங்க இரண்டு பேரும் அப்படிப் பேசியிருக்கேளா...? அன்னிக்குப் பேசியிருந்தா இன்னைக்கு அழுதிருக்க மாட்டே..."

பேசினால் எதிராளி கேட்க வேண்டாமா...? ரஞ்சனி பேசியபோது அவள் கணவன் கேட்கவில்லை; அவள் அப்பாவும் கேட்கவில்லை...!

சரித்திரம் தன்னைத்தானே மீண்டும் எழுதிக் கொண்டது போலிருந்தது.

தேடித் தேடி தேர்வு செய்த மாப்பிள்ளை சங்கர். வாக்குறுதி பெற்றுத்தான் ரஞ்சனியைக் கொடுத்தார்கள். அரசியல்வாதியின் வாக்குறுதிக்குரிய ஆயுள்கூட அதற்கு இல்லை!

"ரொம்ப சுலபமா சொல்றார்ப்பா – ஏதோ அரைக் கிலோ கத்திரிக்காய் போதும்ங்கற மாதிரி, 'போதும் நீ கச்சேரி பண்ணினது'ன்னு சொல்றார்ப்பா..."

ஆற்றாமையில் ரஞ்சனியின் குரல் உடைந்தபோது வசந்திதான் அவள் தோளைத் தொட்டுத் தேற்றினாள்.

பாஸ்கரன் தூசி தட்டும் அலட்சியத்துடன் பேசினான். "ஆம்பிள்ளை மனசு அப்படித்தாம்மா... போதுமே. பத்து வருஷம் கச்சேரி பண்ணியாச்சு. இனி வீட்டோட இருந்துக்கோ. சங்கர் நல்ல பையன்...."

விக்கித்துப் போனவளிடம் வசந்தி கேட்டாள் : "சங்கர்கிட்டே மனசு விட்டுப் பேசிப் பார்த்தியா ரஞ்சனி...? உன் உணர்வுகள், கனவுகளையெல்லாம் எடுத்துச் சொன்னியா...?"

"பேசினேன்மா... நீ பேசியிருந்தா என்ன நடந்திருக்குமோ அதுதான் நடந்தது..."

ரஞ்சனி விவகாரத்து கோரி, பிரிந்து 'தனிக் குடித்தனம்' போனாள். தானே தேடி அலைந்து ஃபிளாட் பார்த்துக் கொண்டாள். போன், ஸ்கூட்டர் என்று சின்ன சௌகரியங்கள் செய்து கொண்டாள்.

சங்கரைப் பிரிந்த வேளை அவள் வாய்ப்புகள் பெருகின. இப்போது மாருதி வாங்கியிருக்கிறாள். மோகனத்தை அலறவிட்டுக் கொண்டு பறக்கிறாள். ரொம்ப கறாராக 'ரேட்' பேசுகிறாள் என்று செய்தி வருகிறது. 'பாட்டா அது... ஆகாச கங்கை மாதிரி பிரவாகம்' – சிலாகிப்பும் கூடவே வருகிறது.

வசந்தியால் சிலாகிப்பைத்தான் கேட்க முடிகிறது. ரஞ்சனியின் கச்சேரிகளுக்குப் போவதை பாஸ்கரன் தடைபண்ணியிருந்தான். அவன் ஊரில் இல்லாத சமயம் போகலாம். ஆனால் செய்தி எட்டிவிடும் என்கிற பயம். போனில் மட்டும் பேசுவாள்.

"ரஞ்சி... எப்படியிருக்கே கண்ணா? தனிமையா இல்லையா...?"

ரஞ்சனி பெரிதாகச் சிரிப்பாள் –

"நான் தனியா இல்லைம்மா.... சுதந்தரமா இருக்கேன். துணைக்கு சங்கீதம் இருக்கு... நீதான் தனியா இருக்கே. அப்பா இருந்தும் தனியா... ஒண்ணு பண்ணேன்... என்கூட வந்து இருந்துடேன்... உன் தம்பூராவையும் எடுத்துண்டு..."

"நீ ரொம்ப தைரியசாலி ரஞ்சனி... நான் அப்படி இல்லை. அங்க வந்தா உனக்கு பாரமாயிடுவேன். நீ தனியாவே இரு – இண்டிபெண்டென்டா இரு..."

கண்ணாடி அலமாரியில் சிறைப்பட்டிருந்த தம்பூரா கண்ணில் பட்டது. வசந்தியின் மனசுக்குள் 'மீட்டல்' மீண்டும் ஆரம்பமாகியிருக்கிறது.

## நூல் அறிமுகம்

# இந்த மோகினி எங்கிருந்து வந்தாள்!




**தமிழ் நாடு சட்டப் பேரவை என்பது முற்காலத்தில் புன்னகைப் பூக்களை மலரவிட்ட நந்தவனமாகவும் இருந்திருக்கிறது! கலைஞர் தம்முடைய சட்டமன்ற அனுபவங்களைச் சுவைபடச் சொல்லும் தொகுப்பு 'மலரும் நினைவுகள்.' (வெளியீடு– திருமகள் நிலையம், சென்னை–17, விலை ரூ.24.)**

மதுவிலக்குக் கொள்கையில் கலைஞர் முரட்டுப் பிடிவாதமாக இருந்தபோது, சட்டமன்றத்தில் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் கேட்ட கேள்வியும் பதிலும்:

'போதை என்பது எதில் எத்தனை சதவீதம் இருக்கிறது என்பதைக் கணக்குப் பார்த்தால் நாம் சாப்பிடக் கூடிய அரிசியிலே கூட ஐந்து சதவிகிதம் போதைச் சத்து இருப்பதாகக் கூறப்படுகிறது. பத நீரிலும் எல்லாவற்றிலும் போதைச் சத்து இருக்கத்தான் செய்கிறது. எனவே மதுவிலக்கை ரத்து செய்து, கள்ளுக் கடைகளைத் திறப்பதற்கு அரசு முன் வருமா?'

'உறுப்பினர் அவர்களுக்கு அரிசி போதையே போதுமென்று கருதுகிறேன்'– கலைஞர் பதில்.

## நூலிலிருந்து மேலும் சில துளிகள்:

**ஒத்திகை:**

“நாவலரும் மதியழகனும் நங்கவரம் விவசாயிகள் பிரச்னை குறித்து என்னிடம் விவரம் அறிந்து கொள்ள விரும்பினர். நான் அந்தப் பிரச்னை குறித்து சிற்றுண்டி அருந்திக் கொண்டே அவர்களிடம் விளக்கினேன். அருந்தி முடிந்த பின்னரும் அவர்களிடம் நீண்ட நேரம் விளக்கத் தொடங்கி விட்டேன்.

“சிற்றுண்டி அருந்தி விட்டுச் சிவக்கச் சிவக்க வெற்றிலை போட்டவாறு ஏ.வி.பி. ஆசைத்தம்பியிடம் எங்களைச் சுட்டிக் கொண்டே அண்ணா அவர்கள் காவிப்பல் தெரியச் சிரித்துக் கொண்டு வந்தார். நாவலர் முதுகில் தட்டி, 'நெடுஞ்செழியன்! இப்போது கருணாநிதி உனக்கும் மதியழகனுக்கும் நங்கவரம் பிரச்னை பற்றி விளக்கமளித்துக் கொண்டிருக்கிறான் என்றுதானே எண்ணுகிறீர்கள்; அதுதான் இல்லை! அவன் இன்று சட்டசபையில் அந்தப் பிரச்னை குறித்து முதன்முதலாகப் பேசப் போகிறான். அதற்காக உங்கள் இருவரிடமும் ஒத்திகை பார்த்துக் கொண்டிருக்கிறான். அவ்வளவுதான்!' என்றார்.

''அருகிருந்த அனைவரும் 'கொல்'லென்று சிரித்து விட்டனர். 'அதெல்லாம் இல்லையண்ணா' என்று சிரித்துக் கொண்டே நான் மழுப்பினாலும் கூட, அண்ணா அவர்கள் உண்மையைச் சொல்லி விட்டாரே என்று எனக்குள்ளாகவே வியந்து கொண்டு கூச்ச முற்றேன்.

"சட்ட சபையில் பேச இவ்வளவு அக்கறை எடுத்துக் கொள்ள வேண்டுமப்பா; தயார் நிலையில் இருந்து பேசும் பேச்சே தரமானதாக இருக்க முடியும்' என்று அப்போது அண்ணா அவர்கள் சொன்னது இன்னமும் எனக்கு மறந்து போகாத பாடமாகவே இருக்கிறது!"

## 'மோகினிப்படி' விவாதம்:

**கே. வினாயகம்:** இந்தப் 'படி'க்கு மோகினி, ரம்பை, ஊர்வசி என்று பெயர் எப்படி வந்தது? இந்த மோகினி எங்கேயிருந்து வந்தாள்?

**கே.ஏ.மதியழகன்:** தோற்றத்திற்கு இது மற்ற கற்பனையைத் தூண்டி விட்டாலும், தேவாலயங்களுக்குக் கொடுக்கப்படுகிற மானியமாகும் இது. ஸ்ரீரங்கம் ரங்கநாதர் மோகினி வேஷம் போட்டுக் கொண்டதன் அடிப்படையில் ஓர் இரவு அந்த சுவாமிக்கு அப்படி வேஷம் போட்டே உற்சவம் நடத்துகிறார்கள். அந்த அடிப்படையில் கோவிலுக்குக் கொடுக்கப்பட்ட இந்த மானியம் 'மோகினி மானியம்' என்று பெயர் பெற்றிருக்கக் கூடும். பெண்கள் யாருக்கும் கொடுக்கப்படுகிற மானியம் அல்ல இது.

**திண்டிவனம் க. ராமமூர்த்தி:** ஸ்ரீரங்கநாதர் மோகினி வேஷம் போட்டுக் கொண்டதனால் 'மோகினிப் படி' கொடுக்கப்படுகிறது என்பதனால், இதை வைஷ்ணவக் கோவில்களுக்கு மட்டும் கொடுப்பது பற்றி சர்க்கார் ஆலோசிக்குமா?

**பொதுப்பணித்துறை அமைச்சர் (கலைஞர்):** ரங்கநாதர் பெண்வேஷம் போட்டு சிவனைத்தான் மயக்கினார் என்பது புராணம். ஆகவே சிவன் கோவில்களுக்கும் கொடுக்கலாம். (சிரிப்பு)

தொகுப்பு: **சுப்ர.பாலன்**

# ராஜாளியா? ராத்திரி ராணியா?



# ராஜாளி

**கா**தில் பூங்காவனம் சுற்றும், மெக்கனாஸ் கோல்டிலிருந்து சமீபத்தில் வந்து, ஓடிய 'காங்கோ' வரைக்கும் இங்கிலீஷ்காரர்கள் சக்கையாகப் பிழிந்து போட்டுவிட்ட அதே தங்கப் புதையல் தேடுகிற விஷயம்தான்.

'அகரனி'ல் மிச்சம் மீதி விட்டு வைத்த கானக லொக்கேஷன்களை வீணாக்க வேண்டாம் என்ற எண்ணம் போலும் செல்வமணிக்கு... ஏதோ ஒரு தீவு, காடு, காட்டுவாசிகள் (டான்ஸ் இல்லாமலா?) வில்லன், புதையல், தேடும் கோஷ்டி, வேறு கோஷ்டி, அழகுக்கு ரோஜா, அடிதடிக்கு மன்சூர், நிறைய குதிரைகள் என்று ராணி, லயன், முத்து காமிக்ஸ் காப்பிரைட்டுகளையெல்லாம் அள்ளிக் கொண்டு விட்டார்கள்.

லாஜிக்...?

மூச்! யார் அந்த நிலவியல் விஞ்ஞானி? ஊரில் யாருக்கும் தெரியாத புதையல் விஷயத்தை எந்த தேவதூதன் வந்து அவர் கனவில் சொல்கிறார்? அரசாங்கம் இதுமாதிரி சமாசாரத்துக்கு ஒரே ஒரு ஆளையா அனுப்பும்? அதுவும் பிக்னிக் மாதிரி சக குடும்ப சமேதராய்!

ஆரம்பமே ஏகப்பட்ட கேள்விகள் எழுப்புகின்றது. எல்லாம் சில நிமிஷங்களுக்குத்தான்.

சுற்றுலா வளர்ச்சித் துறை அதிகாரியாக ராம்கியும் சகஊழியைகளும் தம் சோலியைத் தவிர மிச்சமெல்லாம் (விளக்கம் சாத்தியமில்லை. வெள்ளித் திரையில் காண்க.) பண்ணத் தொடங்கவும், சந்தேகம் வந்து விடுகிறது. நாம் பார்ப்பது ராஜாளியா? ராத்திரி ராணியா?

சூப்பராகத் தூங்கி இருக்கும் (அல்லது 'தன்னை மறந்து' இருக்கும்?) சென்லார் தலையில் இடி விழ.

ரோஜா வந்தாரோ தப்பிக்கிறோம். (படத்தில் முழு டிரெஸ்ஸோடு வரும் ஒரே அம்மணி இவர்தான்.)

அந்தக் கிண்டல், அடாவடி எல்லாம் அநாயாசம். கொஞ்சம் உருக்கம் கூடக் காட்டுகிறார். நன்றாகவே இருக்கிறது.

என்ன பிரயோஜனம்?

இடைவேளைக்குப் பிறகு தங்க வேட்டையில் குதிரைகள் ஓட, துப்பாக்கியுடன் வில், அம்பு போன்ற புராதனங்களும் சேர்ந்து திரையைக் கிழிக்க... விட்டால் போதும் என்று ஆகிவிடுகிறது!

விட்டு விடுவார்களா? எண்ணற்ற பாடல்கள். புதிய இசையமைப்பாளர் அரவிந்துக்கு ட்யூன் நன்றாக வருகிறது. ஆனால் வாத்திய சேர்க்கை சுகமில்லை. தூர்தர்ஷன் மெல்லிசை போல இருக்கிறது.

நல்ல தொழில்நுட்பக் கலைஞர்கள் பலர் ஒன்று சேர்ந்து ஒரு மூட்டைக் குப்பையை அள்ளித் தெளித்தாற்போல இருக்கிறது படம்.

**- தரமணி**

பாரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் : வி. முரளி, பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் : கி. ராஜேந்திரன்.
ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா, விளம்பரம் : 2345622; மானேஜிங் டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

இந்தியாவில்
அதிகமாக
விற்பனையாகும்
சாண்டல்
டால்க்

## இயற்கையின் பரிசு
## இணையற்ற சந்தனம்




### உங்களுக்கு தெரியுமா?

சந்தனம் சருமத்தின் எண்ணெய் பசையை நீக்குவதோடு, வலுவிழந்த சருமத்தை மீண்டும் பொலிவு பெற உதவுகிறது.

ஒப்பில்லாத சந்தனத்தின் முழுப்பலனையும் அதன் முழுகுணமும் மாறாமல் வழங்கும் ஒரு அற்புத அழகு சாதனம் கோகுல் சாண்டால் டால்கம் பவுடர்.

**86 வருடங்களாக தொடர்ந்து உங்களின் அபிமானத்தை பெற்றுவரும்**

**T.S.R. & Co.,**

**Mfrs. GOKUL COSMETICS**